உரை :—சுக்கிரதிசையில் கேதுபுத்திவந்தால் சத்துருக்கள் செய்யும் துன்பத்தால் கஷ்டமும் கவலையும் நேரிட்டு கலங்கச் செய்து வறுமையும் பிணியும் துன்பமு முண்டாகும். ஆனால் குரு, புதன், வளர்பிறைச் சந்திரனுகிய சுபக்கிரகங்கள் இலக்கினத்தை யாகிலும் திசாபுத்தி நாதனையாகிலும் பார்த்தால் வியாபார விருத்தியினுல் திரவிய சேகரஞ்செய்து தனதான்ய சம்பத் துடனே மனைவி மைந்தர், பந்து கூட்டத்துடனே மனேல்லாசமாய் வாழ்ந்திருந்து ஞானனந்தமாய் ஜீவித்திருப்பதற்காகும்.

நவக்கிரக திசாபுத்தி நிர்ணயம்

முற்றிற்று.



# நக்ஷத்திர ஆரூட பலன்

### கணேசர் துதி

எண்சீரடி விருத்தம்

ஆதிபராசக்தியருள் பாலாபோற்றி
அம்பிகையருண் மைந்தா கணேசாபோற்றி
ஜோதிப்பிரகாச பிரணவமேபோற்றி
செழுஞ்சுடரே துய்யவிநா யகனேபோற்றி
பாதிமதிசடையணிந்தோன் மைந்தாபோற்றி
பக்தர்களெந்நாளுந்துதிக்குந் தேவேபோற்றி
நீதியுடன் நக்ஷத்ர ஆரூடத்தை
நினதருளால்புகல்வதற்கு அருள்செய்வீரே. 1

### ஆரூட பலன்

அன்புடனேவிநாயகரை பூஜைசெய்து
ஆசனத்தில்ஜோதிட னுட்கார்ந்துகொண்டு
சின்முத்ரையாகவே சிவத்தியானம்
செய்தமர்ந்துஓர்மனதா யிருக்கும்போது
தன்முன்னேவந்தா ரூடங்கேட்போர்கள்
தங்களைப்பார்த்தோர் நக்ஷத்ரம் புகலக்கேட்டு
நன்மைதுன்மை இன்னின்னவிதங்களாக
நடக்குமென்றுபலாபலனை புகலுவீரே. 2

உரை :—ஆரூடம் சொல்வதற்கிசைந்த ஜோதிடன் ஸ்நான பான நேமநிஷ்டை புரிந்து பகவத் பக்தியானந்தமாய் கணேசருக்குத் தேங்காயுடைத்து கர்ப்பூரமேற்றி தூபதீபாராதனை செய்து மான்தோலாசனத்தில் அமர்ந்து நவக்கிரகங்களை பூஜித்து தியானஞ் செய்துக்கொண்டிருக்கும்போது தன்னிடத்தில் ஆரூடங் கேட்கவந்தவர்களை இருபத்தேழு நக்ஷத்திரங்களில் ஒன்றைச் சொல்லச் சொல்லி, அவர்கள் சொன்ன நக்ஷத்திரத்தின் பலனுக்கிசைந்த விதமாய் நன்மை துன்மை இன்னின்ன விதமாய் நடக்குமென்று சொல்வீர்கள் ஜோதிட கணித வல்லோர்களே.

உதாரணம் :—நக்ஷத்திர விபரம்

| | | |
|---|---|---|
| 1 அசுபதி | 10 மகம் | 19 மூலம் |
| 2 பரணி | 11 பூரம் | 20 பூராடம் |
| 3 கிருத்திகை | 12 உத்திரம் | 21 உத்திராடம் |
| 4 ரோகணி | 13 அஸ்தம் | 22 திருவோணம் |
| 5 மிருகசீரிடம் | 14 சித்திரை | 23 அவிட்டம் |
| 6 திருவாதிரை | 15 சுவாதி | 24 சதயம் |
| 7 புனர்பூசம் | 16 விசாகம் | 25 பூரட்டாதி |
| 8 பூசம் | 17 அனுஷம் | 26 உத்திரட்டாதி |
| 9 ஆயில்யம் | 18 கேட்டை | 27 ரேவதி |

பலன் சொல்லும் விபரம்

அவரவர்கள்மேற்குறிப் பித்திருக்கும்
அந்தந்தநக்ஷத்ர பேரைச்சொன்னால்
தவறுமலவரவர்கள் மனதிலுற்ற
தமதெண்ணத்தின்பலனை சொல்வாரானால்
நவக்கிரகசகாயத்தி னுலுரைப்பீர்
நடக்கின்றபலனெல்லாம் சரியாய்தோற்றும்
கனமுடனிவற்றையெல் லாமுணர்ந்து
காசினியிலுள்ளோர்க்குப் பலன்சொல்வீரே. 3

உரை:—ஆரூடங் கேட்க வந்தவர்கள் மேலே காட்டியிருக்கின்ற நக்ஷத்திரங்களொன்றின் பேரைச் சொல்லக்கேட்டு அந்தந்த நக்ஷத்திரங்களுக்குரிய பலன்களை விபரமாய்ச் சொன்னால் சரியாயிருக்கும்; இதனை ஜோதிடர்கள் கவனமாய்ப் பார்த்து, ஆரூடங்கேட்க வந்தவர்கட்கு பலாபலனை விபரமாய்ச் சொல்ல வேண்டும்.

அசுபதி நக்ஷத்திர பலன்

அசுபதியென்றேயுரைத்து கேட்டவாக்ய
ஆரூடபலனுத் தமமேயாகும்
பசுபதியினருளாலே நினைத்தகாரியம்
பக்குவமாய்நலமுடனே நடந்தன்பாக
விஜயமுடன்ஜெயம்பெற்று வருவாரின்னும்
விரும்பியதோர்பொன்பொருளும் வந்துசேரும்
விசுவாசமாகவே சகலருந்தான்
விருப்பமுடனேயிருப்பார் கவனிப்பீரே. 4

உரை :—அசுபதி நக்ஷத்திரத்தைச் சொன்னால் அவர்கள் நினைத்த காரியம் உத்தமமாகும். அதன் பலன் விபரமெவ்வித

மெனில் பகவான் கிருபையால் நினைத்த காரியம் ஜெயமாவ துடன் தான் நாடிய மனிதர்கள் தன்மீது விஸ்வாசமாக கேட்ட தைத் தருவார்கள். ஆகையால் இந்தக்காரியம் ஜெயமென் றுரைக்கவேண்டும்.

### பரணி நக்ஷத்திர பலன்

பரணியென்றநக்ஷத்திரம் சொல்வாரானால்
பலனில்லைஅதமபல னாகுமப்பா
தரணியில்நீநினைத்தகா ரியங்கூடாது
தனக்கெவரும்பகையாவார் பொருளுஞ்சேதம்
சிரந்தாழ்த்தலாகும்சபைக் கேகலாகா
சிறிதேனுமிவர்சொல்லோ சபைக்கேருது
திரவியமுஞ்சேதமாம் சண்டையுண்டு
தீராகவலைகைத்தொழிலு மகப்படாதே. 5

உரை :--ஆரூடங் கேட்க வந்தவர்கள் பரணியென்ற நக்ஷத் திரத்தை சொல்வாரானால் அதமபலனாகும். ஆகையினால், நீ நினைத்த காரியம் பலிக்காது. சகலரும் விரோதிகளா யிருப்பார் கள். கைப்பொருள் சேதமாகும். சபையிற் சென்று பேசினாலும் தனது வார்த்தையை எதிரிகள் அலக்ஷியஞ் செய்து அவமதிப் பார்களென்றும், ஜீவன காரியத்திலும் கஷ்டமும் கவலை யுண் டாகுமென்றும், கைப்பொருள் சேதமாவதுடன் சண்டை, சச்சர வும் தீராத மனக்கவலையு முண்டாகுமென்றும், அதனால் தற் சமயம் நாடிய காரியத்தை நினைக்க வேண்டாமென்று சொல்ல வேண்டும்.

### கார்த்திகை நக்ஷத்திர பலன்

கார்த்திகையென்றேசொன்னால் ஆரூடந்தான்
கைகண்டபலனாய்உத் தமமேயாகும்
மூர்த்திகளின்சகாயத்தால் நினைத்தகாரியம்
முதன்மையாய்க்கைகூடும் மரணமுமாகும்
ஆர்த்தசபையிற்பேசி வெற்றிகொள்வார்
ஆபரணம்பொன்பொருளும் வந்துசேரும்
கீர்த்திசேருத்யோக வர்த்தகலாபங்கள்
கிடைக்குமென்றுசொல்வீர் ஜோதிடவல்லோரே. 6

உரை :—ஆரூடங் கேட்க வந்தவர்கள் கிருத்திகை நக்ஷத் திரத்தின்பேரைச் சொன்னால் நினைத்த காரியம் ஜெயமாகும்; உத்தமமென்று சொல்லவேண்டும். பகவத் சகாயத்தால் சகலமும் நன்மையாய் நடக்குமென்றும், சபையிற் பேசச் சென்றால் தன் வார்த்தையுமே மேன்மையாய் நடக்குமென்றும், உத்யோக

மேன்மை, வியாபார லாபமும் பெருகுமென்றும், ஆபரணாதிகளும், பொன் பொருள் விசேஷமாய் கிடைக்குமென்றும் சொல்வீர்.

### உரோகணி நக்ஷத்திர பலன்

அன்புடனேஆரூடங் கேட்கவந்தோர்
அவர்வாயால்ரோகணிநக்ஷத் ரத்தைச்சொன்னால்
நன்மையில்லைஅதமபல னென்றுரைப்பாய்
நாடியதோர்காரியங்கை கூடாதென்பாய்
வின்னமாய்உத்யோக பங்கமாகும்
வியாபாரநஷ்டமென்றும் விபரமாய்ச்சொல்
நன்மணமுமிவ்வருஷங் கூடாதென்பாய்
நலமில்லைநீகேட்ட ஆரூட மென்பாயே. 7

உரை :—வந்தவர்கள் ரோகணி நக்ஷத்திர மென்றுரைத்தால் அதமபலனாகும். அவர்கள் நாடிவந்த காரியம் சித்தியாகாது. அவர்கள் செய்யும் கைத்தொழில் உத்தியோகத்தில் பங்கமாகும், தொழி லகப்படாமல் மதிமயங்கி திகிலுற்றிருப்பார்கள். வர்த்தகம் செய்பவராயிருந்தால் பலவித நஷ்டமாகும், கலியாண காரியத்தை நினைத்து வந்தால் இந்த வருஷம் பலவித கலகத்தாலும் மனஸ்தாபத்தாலும் திருமண வைபவமும் நடவாதென்றுரைப்பாய்,

### மிருகசீரிட நக்ஷத்திர பலன்

மிருகசீரிட நக்ஷத் திரத்தைச்சொன்னால்
மிக்கநற்பலனில்லை மத்திபமேயாகும்
தருணத்திலுற்றநோய் தீருமென்பாய்
தனக்குப்பகைவர்கள்துன்பம் கொஞ்சங்காட்டும்
முருகனைஸ்தோத்ரம்புரிந்து நவக்ரகங்கள்
முநற்கடவுள்விநாயகனை பூஜைசெய்தால்
திருமணமுங்கூடும் பொன்பொருளும்சேரும்
திரவியமும்சேகரித்து ஜீவிப்பாரே. 8

உரை :—மிருகசீரிடத்தின் பேரைச் சொன்னால் மத்திப பலனாகும். கோபத்தினால் சகலரும் விரோதமா யிருப்பார்கள். சரீரத்தில் வியாதி வருவதும் போவதுமா யிருக்கும். ஆகையால் சிவ சுப்ரமணியரையும் விநாயகரையும் பூஜித்து நவக்கிரக பூஜை செய்தால் வறுமை பிணியெல்லாம் விலகும், சகலரும் சிநேகமாயிருப்பார்கள். பந்து மித்திரர் சகாயமா யிருப்பார்கள். கலியாணங்கூடும். பொன் பொருள் திரவியலாபமும் கிடைத்து பிரபு வைப்போல் பெருமையாய் ஜீவித்திருப்பார்கள்.

## திருவாதிரை நக்ஷத்திரத்தின் பலன்

திருவாதிரை நக்ஷத்ர மென்றுரைத்தால்
தீங்கெய்தும் நினைத்த காரியமாகாது
பருவப்பெண்ணொருத்தியால் கலகமாகும்
பார்தனிலேமழைபொழியா வருத்துமென்பார்
தருணத்தில்விதைத்தபயிர் விளைவதில்லை
தற்பரனும்கணேசரையே பூஜைசெய்தால்
கருமவினையாலுற்ற கலகம்நீங்கி
கவலைதுன்பமில்லாமல் ஜீவிப்பாரே. 9

உரை:—ஆருடங் கேட்கவந்தோர் தமது வாயினால் திருவாதிரை நக்ஷத்ரமென்று சொன்னால் அவர்கள் நினைத்துவந்த காரியம் முடியாது. வாலிபப்பெண்ணால் வம்பு சண்டை கலகமனைத்தும் நேரிட்டுத் துன்பமும் துயரமுமாகும். காலமழை தவறி கஷ்டப்பட்டு விதைத்த தான்யாதிகள் விளையாது. ஆனால் சித்தசுத்தி, பக்திவைராக்கியத்துடனே விநாயகப்பெருமானை பூஜித்தால் சகலவித கஷ்டமும் விலகி கருமவினையால்வந்த பலவித கலகமும் விலகி கவலையும் துன்பமுமில்லாமல் சுகஜீவியாய் வாழ்ந்திருப்பீர்களென்று சொல்லுவீர்.

## புனர்பூச நக்ஷத்திரத்தின் பலன்

புனர்பூசநக்ஷத்திர மென்றுரைத்தால்
பூமியிலேமாடாடு நிலமும்வீடும்
தனதான்யசம்பத்தும் கிடைத்தன்பாக
தரணியிலேகுபேரசம்பத் தாயிருப்பார்
இனஜனங்கள்நட்பாவார் மணமுங்கூடும்
இனிதுடனேசுகபோக மனுபவித்து
தனதுமனையாள்புத்ர பாக்யம்பெற்று
தன்மனதின்படிநடப்பா ளெனச்சொல்வாயே. 10

உரை:—ஆருடங் கேட்கவந்தவர்கள் புனர்பூச நக்ஷத்திர மென்று சொன்னால் அவர்களுக்கு நற்காலம் வருமென்றும், தன தான்ய சம்பத்துடன் ஆடுமாடுகள் முதலானவை விசேஷமாய்க் கிடைப்பதுடன் குபேரசம்பத்துடனே இருப்பார்களென்றும், பந்து மித்திரர்களனைவரும் ஆசாபாச நேச விஸ்வாசமாயிருப்பார்கள். கலியாணங்கூடும்; சுகபோகபாக்கியமனைத்தும் அனுபவித்து மனையாள் தன் மனதின்படி நடந்து சுகஜீவியாய் வாழ்ந்திருப்பதுடன் புத்ர பாக்யம்பெற்று ஆனந்தமாயிருப்பீர்களெனப் புகல்வீர்.

## பூச நட்சத்திரத்தின் பலன்

பூசநக்ஷத்திரமென்று சொல்வாரானால்
போனவர்மறுபடியும் திரும்பாரென்பாய்
நாசமாய்நினைத்ததெல்லாங் கைகூடாது
நாற்றிசையும்மழையில்லா துலர்ந்துபோகும்
மோசஞ்செய்வார்பகைவர் வறுமைசூழும்
மொழிவதெல்லாம்பொய்யென்பா ரருகிருப்போர்
வீசம்பொன்பொருள்கையில் கிடைத்திடாது
விசனத்தால்கலங்குவீரென் றோதுவாயே. 11

உரை :—ஆருடங் கேட்போர் பூசநக்ஷத்திரமென் றுரைத்தால் பிரயாணத்திற்கு பங்கமுண்டாகுமென்றும், போனவர் மறுபடியும் திரும்பாரென்றும், நினைத்த காரியமெல்லாங் கைகூடாமல் நாசமாகுமென்றும், நாலாபக்கத்திலும் மழையில்லாமல் காய்ந்துலர்ந்து போகுமென்றும், பகைவர் மித்ரபேதமாய் மோசஞ்செய்வார்களென்றும் சொல்வீர். வறுமையதிகரித்து உத்தியோகமில்லாமலும் வர்த்தகமில்லாமலும், கையில் காசும் பணமுமில்லாமல் கலங்குவார்களென்று சொல்வீர். ஆனால், நவக்கிரக பூசை செய்துகொண்டிருந்தால் கொஞ்சங் கொஞ்சமாய் சுகலாபம் பெறுவீர்களென்றும் தெரிவிப்பீர்.

## ஆயில்ய நட்சத்திர பலன்

அன்புடனே ஆருடங் கேட்கவந்தோர்
ஆயில்யநக்ஷத்ர மென்றுரைத்தால்
மன்னர்பிரபுக்களால் நலமுண்டாகும்
மாநிலத்தில்தனவானாய் ஜீவிக்கலாகும்
தன்வாயின்சொல்மதுர வார்த்தையாகும்
தனதுமனையாள்புத்ர மித்ரரோடு
நன்மையுடன்ஜீவிப்பார் பகவானாலேயென்று
நவிலுவீர்ஜோதிடசாஸ்திர வல்லோரே. 12

உரை :—ஆருடங் கேட்கவந்தவர்கள் ஆயில்ய நக்ஷத்ர மென்று உரைத்தால் அரசர்களாலும், பிரபுக்களாலும் வெகு மேன்மை யுண்டாகுமென்றும், உத்யோக விர்த்தியாலும், வியாபார லாபத்தாலும் பலவிதமாய் திரவிய சேகரஞ்செய்து தனவந்தனாக ஜீவித்திருப்பதற்காகுமென்றும் சொல்வாய். அவர்கள் மனிதரிடத்தில் பேசுவதெல்லாம் அழகான உண்மை வாக்கியமாயிருக்குமென்றும், மனைவி, மைந்தர்கள், சுற்றத்தாருடன் சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்களென்றும் சொல்வீர்கள்.

## மக நட்சத்திர பலன்

மகநக்ஷத்திரமென்று சொல்வாரானால்
　　மனதினிலேநினைத்ததெல்லாம் முடியுமப்பா
ஜெகமீதுதனதான்ய சம்பத்தோடு
　　செல்வவந்தராய்மனைவி மைந்தரோடும்
புகழ்மேவும்வியாபாரம்செய் துத்யோகத்தால்
　　பொருள்தேடிபந்துமித்ர ருடனன்பாக
சுகபோகபாக்யமெல்லா மனுபவிப்பாரென்று
　　சொல்லுவீர்ஜோதிடத்தில் மிகவல்லோரே. 13

உரை :—ஆரூடங் கேட்க வந்தவர்கள் மக நக்ஷத்ரமென்று சொல்வாரானால் அவர்கள் நினைத்த காரியமெல்லாம் நிறைவேறுவதுடன் உத்தியோகங் கிடைத்தும், வியாபாரத்தில் லாபமதிகரித்தும், தனந்தான்ய சம்பத்துடன் வெகு மேன்மையாக ஜீவித்து மனைவி, மைந்தர், மித்திரர், சகலநும் புகழுந்தன்மையான பெருமையுடன் சுகபோகமாய் ஜீவித்திருப்பதற் காகுமென்றுஞ் சொல்வீர்கள்.

## பூர நட்சத்திரத்தின் பலன்

பூரநக்ஷத்திரத்தைப் புகல்வாரானல்
　　போனவர்கள்திரும்பார்கள் பொருளுஞ்சேதம்
தாரமிழந்திடுவார்கள் வறுமைசூழ்ந்து
　　தவிப்பார்கள்விரதபங்க மாகும்பொல்லா
கோரமாய்பலதுன்பம் வந்துசூழ்ந்து
　　கொடுமையேசத்துருக்கள் செய்வாரென்பாய்
தாரணியில்நவக்கிரக பூஜைசெய்து
　　தப்பித்துக்கொள்வீரென் றுரைவீரே. 14

உரை :—ஆரூடங் கேட்க வந்தவர்கள் பூர நக்ஷத்திரத்தின் பேரைச் சொன்னால் சதாகாலமும் மனவிசாரமா யிருப்பாரென்றுரைப்பாய்; தூரதேசத்திற் சென்றவர்கள் திரும்ப மாட்டார்கள் பலவிதமாய் கைப்பொருள் சேதமாகுமென்றும், மனைவி மரணமாவாளென்றும், வறுமையினாலே தத்தளித்துக் கஷ்டப்பட்டு கலங்குவதுடன் தான் செய்யும் விரத பங்கமாகுமென்றும், விசேஷமான துன்பமும் துயரமும் பகைவர்கள் செய்யும் கொடுமையும் சூழ்ந்து, கஷ்டப்படுத்துமென்று சொல்வீர். ஆனால், நவக்கிரகபூஜை தவறாமல் செய்வீர்களானால் கொஞ்சங் கொஞ்சமாய் கோரபயங்கர கஷ்டநஷ்டமெல்லாம் விலகி சுகமா யிருப்பீர்களென்றும் சொல்வீர்கள்.

## உத்திர நட்சத்திர பலன்

உத்திர நக்ஷத்திர மென்றுரைத்தால்
உத்தமம்சகலவித நன்மையுண்டு
புத்திரபாக்கியமுண்டு பொருளும்சேரும்
பூஸ்திதியும்மெத்தவே பெருகுமப்பா
எத்தினமும்வியாபார உத்யோகங்கள்
எடுத்தகாரியமெல்லாம் ஜெயமேஆகும்
பத்திரங்களெழுதிபணம் கொடுப்பதற்கும்
பாக்கியமுண்டாகுமென்று பகருவீரே. 15

உரை:—உத்திர நக்ஷத்திரத்தின் பேரைச் சொன்னல் நினைத்தகாரியமெல்லாம் உத்தமமாகும். அதனல் சகலவித நன்மையும் புத்திர பாக்கியமு முண்டாகும். உத்தியோக மேன்மையாலும், வியாபார இலாபத்தாலும் பலவிதமாய் பொருள் சேகரஞ் செய்து கொடுக்கல் வாங்கல் முதலான பெருமையும், பத்திரமெழுதி வாங்கிக்கொண்டு பணங்கொடுக்கும் பிரபுத்தன்மையுமுண்டாகுமென்றும் சொல்வீர்.

## அஸ்த நட்சத்திர பலன்

அஸ்தமென்றுசொன்னலே துன்பமப்பா
அரசர்கள்பிரபுக்கள் பகையுண்டாகும்
வித்தையில்லைபுத்தியில்லை சோம்பலுற்று
விவேகமில்லாவறுமையால் திகைத்திருப்பார்
சித்தமிகத்துயரடைந்தெப் போதும்பொல்லா
திகிலடைந்துவறுமையினல் கலங்கிநிற்பார்
இத்தகையதுன்பமெல்லாம் நடக்குமென்று
இன்பமாகச்சொல்வீர் ஜோதிடவல்லோரே. 16

உரை:—ஆரூடங் கேட்க வந்தவர்கள்! அஸ்த நக்ஷத்திரத்தின் பேரைச் சொன்னல் சித்தம் மயங்கி திகைத்து, ஞாபகசக்தியில்லாமல் கைத்தொழிலுமில்லாமல் வறுமையாளராய்க் கலங்கித் துடித்து திகிலடைந்து, துன்பமும் துயரமுமடைந்து, கவலையினல் விசனமா யிருப்பார்கள். ஆனல் தினந்தோறும் நவக்கிரக பூஜை செய்து கொண்டிருந்தால் சுகமாயிருப்பதற்காகும்.

## சித்திரை நட்சத்திரத்தின் பலன்

சித்திரை நக்ஷத்திரத்தின் பேரைச்சொன்னல்
சிவனருளால்பலநன்மை மிகவுண்டாகும்
வித்தையுடன்புத்தியுண்டு உத்தியோகவிருத்தி
வியாபாரலாபத்தால் பொருளுஞ்சேரும்

மெத்தநன்மைகளுண்டு மணமுங்கூடும்
 மேன்மையுடன்பந்து மித்ரகூட்டஞ்சேரும்
உத்தமமென்றினிதுடனே வாழ்வீரென்று
 உரைத்திடுவீர்கேட்போர்க்கு ஜோதிடவல்லோரே. 17

உரை :—ஆரூடங்கேட்க வந்தவர்கள் வாயினால் சித்திரை நக்ஷத்திரமென்று சொன்னால் அவர் மனதில் நினைத்தகாரியம் ஜெயமாகுமென்றும், சிவபெருமான் திருவருளால் பல நன்மை யுண்டாவதுடன் வித்தையும்,புத்தியும் வெகுவாயுண்டாவதுடன் உத்தியோக விருத்தியும், வியாபாரலாபமும் பெருகி, தனந் தான்ய சம்பத்தும், பந்துமித்திரர் கூட்டமும் சேர்ந்து பலவித நன்மையும் பெற்று சுகானந்தமாய் ஜீவித்திருப்பார்களென்று சொல்லுவீர்கள்.

## சுவாதி நட்சந்திரத்தின் பலன்

சுவாதியெனும்நக்ஷத்திர பேரைச்சொன்னால்
 சொர்னபணிபூஷணமும் நஷ்டமாகும்
ஜாதியார்பகையாகி துன்பமுற்று
 சஞ்சலத்தினாற்றிகைத்து கலங்குவார்கள்
தாதிகளும்அடிமைகளும் விலகிப்போவார்
 தனதான்யமில்லாமல் விசனமாகும்
ஆதிகணேசர்பூஜை நவக்கிரகபூஜை
 அன்புடனேசெய்துலகில் ஜீவிப்பாரே. 18

உரை :—ஆரூடங்கேட்க வந்தவர் சுவாதி நக்ஷத்திரத்தைச் சொன்னால் தனந்தான்ய நஷ்டமும், பொன், பொருள், பூஸ்திதி யும் நஷ்டமாவதுடன் ஜாதியார்களும் பகையாகி பலவித கஷ்டப் படுத்துவதுடன், வறுமையினால் மனந்திகைத்து, அடிமையாட் களும் விலகிப் போவார்கள். ஆனால் ஆதிகணேசரை பூஜை செய்து நவக்கிரகங்களை சதாகாலமும் தியானஞ்செய்து பூஜித் துக் கொண்டிருந்தால், அந்தந்த சமயத்தில் வருகிற கஷ்ட நஷ்டமெல்லாம் விலகி அப்போதைக்கப்போது சமயம்போல் சுபபலனை யனுபவித்து ஜீவித்திருப்பார்கள்.

## விசாக நட்சத்திரத்தின் பலன்

அன்புடனேவிசாகநக்ஷத்திரத்தைச்சொன்னால்
 அநேகவிதநன்மை யுண்டாகுமென்றும்
நன்மையுடன்வித்தைபுத்தி உத்தியோகமேன்மை
 நாடியதோர்வியாபார லாபமாகும்
பொன்பொருளும்பூஸ்திதியும் சேரும்பாக்கியம்
 பொருந்தியேமனைவிமைந்தர் பந்துமித்திரர்

இன்பமுடனேவாழ்த்த மேன்மையாக
இனிதுடனேஜீவிப்பா ரெனச்சொல்வீரே. 19

உரை:—ஆரூடங்கேட்க வந்தவர்கள் விசாக நக்ஷத்திரத்தின் பேரைச்சொன்னால், அநேகவித நன்மையுண்டாகுமென்றும் வித்தையும் வியாபார விர்த்தியும்பெற்று திரவியலாபமும் பொன் பொருள், பூஸ்திதியும் பொருந்தி, மனைவி, மைந்தர், பந்து மித்திரர்களுடனே சுகஜீவியாய் வாழ்ந்திருப்பதற்கிசைந்த நலமனைத்தும் உண்டாகும். நினைத்த காரியமும் ஜெயமாகும்.

## அனுஷ நக்ஷத்திரத்தின் பலன்

துன்பமுண்டு அனுஷ நக்ஷத்திரத்தைசொன்னால்
தொலையாதவிசாரமப்பா பூவாடைக்காரி
தன்குறையால்பலதுன்பம் வந்துசூழும்
தாரித்ரபீடையுண்டு நலமாகாது
நன்மையுடன்விநாயகரை ஸ்துதிபுரிந்து
நவக்கிரகபூஜைசெய்தால் வறுமைநீங்கி
பொன்பொருளும்சேர்ந்து திருமணமுண்டாகும்
போஜனாதிகள்வெகுவாய் கிடைக்கும்பாரே. 20

உரை:—ஆரூடம் கேட்க வந்தோர்கள் அனுஷ நக்ஷத்திரத்தின் பேரைச் சொன்னால் அவர்களுக்கு தீராத மனவிசாரமும் கஷ்டமும் கவலையும் சூழ்ந்து தன் வீட்டுப் பூவாடைக்காரி குற்றத்தால் பலவித துன்பமும் துயரமும் சூழ்ந்து, வறுமை துயருடன் கஷ்டப்படுத்தும். கலியாணமாகாமல், கஷ்டப்படுத்துவதுடன் மனச்சஞ்சலமும் பயங்கரமும் பொருந்தியிருக்கும். ஆகையால், விநாயகரை ஸ்துதி செய்து நவக்கிரக பூஜைசெய்தால் சகலவித தோஷமும் விலகி, தனதான்ய சம்பத்தும் பொன் பொருள், பூஸ்திதி கிடைப்பதுடன் திருமண வைபவம் நடந்து சுகபோஜனாதிகளுடன் சுகசவுக்கியமாய் ஜீவித்திருப்பார்கள்.

## கேட்டை நக்ஷத்திரத்தின் பலன்

கேட்டைநக்ஷத்திரத்தின் பேரைச்சொன்னால்
கெம்பீரம்கௌரவமும் கீர்த்தியோங்கி
வீட்டையாள்மனைவியினால் சுகபோகத்தை
விரும்பியேதிரவியசே கரங்கள்செய்து
கேட்டைமிகும்மூதேவி வாசம்நீங்கி
செழிப்புற்றுமகாலக்ஷ்மி யருளினாலே
நாட்டிலேபிரபுவென வாழ்ந்திருக்கும்
நாளதுதந்தன்னாயப் புகல்வீரே. 21

உரை :—ஆரூடங் கேட்க வந்தவர்கள் கேட்டை நக்ஷத்திர மென்று சொன்னால் அவர்களுக்கு இனிமேல் துக்கமும், துயரமும், துன்பமும் நீங்கி, மூதேவி வாசமில்லாமல் மகாலக்ஷ்மி கிருபையினால் சகலவித நன்மையும், கௌரவமும், கெம்பீரமும் கீர்த்தியும், தனந்தான்ய சம்பத்தும் அதிகரித்து, மனைவி மைந்தர் பந்துமித்திரர்களின் பெருக்கத்தினால் விசேஷநன்மையும், சுகபோகபாக்கியமும் பெற்று தரணியோர் பிரபுவென்று புகழுந்தன்மையான பொருள் சேகரஞ் செய்வதற்கிசைந்த நந்நாள் வந்ததென் றன்புடன் புகலுவீர்.

## மூல நக்ஷத்திரத்தின் பலன்

ஆரூடங்கேட்கவந்தோர் மூலமென்றால்
அல்லல்துன்பமின்றோடே விலகிற்றென்றும்
காருண்யதிருமாலின் சகாயத்தாலே
கனகம்வெள்ளிதிரவியங்கள் சேகரித்து
பாருக்குளிவன்போற்பிரபு கிடையாதென்றும்
பகைஞரில்லாசகலர்க்கும் மித்ருவாகி
சீருடனேகௌரவமும் கீர்த்தியோடே
ஜீவிப்பாரென்றினிதாய்ப் புகலுவீரே. 22

உரை :—ஆரூடங்கேட்டு பலன் தெரிந்துகொள்ள வந்தவர்கள் மூலநக்ஷத்திரத்தின் பேரைச்சொன்னால் இனிமேல் யாதொரு கஷ்டநஷ்டமும் அல்லல் துன்பமுமில்லையென்று கருணாகரனாகிய ஸ்ரீமந் நாராயணர் கிருபையால் தனந்தான்ய சம்பத்துடன் பொன் பொருள் பூஸ்திதியும் பெறுவதற் கிசைந்த வியாபார விருத்தி, உத்தியோகமேன்மை வியாபாரலாபமும் பெற்று உலகத்தோர் பிரபுவென மெச்சுந்தன்மையான கீர்த்திப்பிரகாசமும், பெருமையும் கௌரவமும் பொருந்தி யிருப்பதற்காகும். உலகத்தில் தனக்கெவரும் பகையில்லாமல் சுகானந்தமாய் ஜீவிப்பதற்காகும்.

## பூராடம் நக்ஷத்திரத்தின் பலன்

பூராடநக்ஷத்ர மென்றுரைத்தால்
போனவர்கள்வரமாட்டார் பொருளும்சேதம்
பாராடப்பலதுன்பம் மழையுமில்லா
பயிர்விளையாபலதான்ய சேதமாகும்
போராடப்பகைவர்வந்து சூழ்வாரப்பா
பொன்பணியும் பூமியுடன்போகுமப்பா
நீராடப்போனமங்கை திரும்பாளென்று
நிதானித்தாரூடபலன் புகலுவாயே. 23

உரை :—ஆரூடங் கேட்க வந்தோர் பூராட நக்ஷத்திரத்தின் பேரைச் சொன்னால் பிரயாணஞ் செய்யப்போனவர் வரமாட்டாரென்றும், கைப்பொருள் சேதமாகுமென்றும் உலகில் தனக்குப் பற்பலவித துன்பமும் துயரமும் நேரிடுமென்றும், மழையில்லாமல் தான்யாதிகள் விளையாதென்றும், சத்துருக்கள் அதிகரித்து சண்டை சச்சரவு செய்வார்களென்றும் பொன் பணி பூஷணாதிகள், காணி பூமிகளும் சிதறிப்போகு மென்றும், ஆற்றில் ஸ்நானஞ் செய்யப்போனவள் திரும்பாளென்றும், ஆரூட கணிதத்தை ஆராய்ந்துணர்ந்து பலன் சொல்வீர்கள்.

## உத்ராட நட்சத்திரத்தின் பலன்

உத்ராட நக்ஷத்ர மென்றுரைத்தால்
    உத்தமமாய்பலநன்மை வந்துசூழும்
புத்திரபாக்யமுண்டு பொருளும்சேரும்
    பூஸ்திதியும்வெகுலாபங் கிடைப்பதோடு
உத்யோகவிர்த்தியும் வர்த்தகத்தின்மேன்மை
    உற்றுரும்பந்து மித்ரருடனேயன்பாய்
எத்ததியும்சுகஜீவி யாகவாழ்ந்து
    எவர்களுக்கும்மேன்மையாய் ஜீவிப்பாரே. 24

உரை :—ஆரூடங் கேட்கவந்தோர் உத்ராடமென்றுரைத்தால் அவர்கள் நாடிவந்த காரியம் ஜெயமென்றும், அதனால் பலவித காரியமும் நன்மை பெறும், புத்திர பாக்கியமும் பொன் பொருளும் உண்டாகுமென்றும், காணி பூமி லாபமும், உத்யோக விர்த்தியும், வியாபார மேன்மையும் அதிகரித்து கௌரமும், கீர்த்தியும், தனந்தான்ய சம்பத்தும் அதிகரித்து மனைவி மைந்தர், பந்துமித்திருடனே சதாகாலமும் சுகானந்தமாய் ஜீவித்திருப்பார்களென்று சொல்வீர்கள்.

## திருவோண நட்சத்திரத்தின் பலன்

வந்தோர்கள் திருவோண நட்சத் திரமென்றாலே
    வயல்தனிலேஜலமில்லா மழையுமின்றி
சிந்தைநொந்துருகியே விளைவில்லாமல்
    சினமுடனேமன்னர்பகை யதிகரித்து
பந்துமித்ரர்பகையாலும் வறுமையாலும்
    பதைபதைத்துசுகமில்லா கலகத்தாலே
எந்தவிதம்பிழைப்பதென்றாலோ சித்துநாளும்
    ஏங்கியேகவலையினால் கலங்குவாரே. 25

உரை :—ஆரூடங் கேட்கவந்தவர்கள் திருவோண நட்சத்திரமென்றால் வயல்தனிலே தான்யாதிகளை விளைப்பதற்கு

ஜலமிலலாமலும், மழையில்லாத கவலேயால் மனந்துடித்து அர சாங்கத்தார் பகை யதிகரித்து, வறுமையினுல் திகைத்துக் கலங்கி, சரீராரோக்கியமில்லாமல் சுகமற்று பந்துமித்திரர் பகை யினுல் மனவிசாரத்துடனே எவ்விதமாய் பிழைப்பதென்று பல தாமும் ஆலோசித்துக் கவலேயினுல் கலங்கி திகைத்திருப்பார் கள். ஆகையால், இந்த ஆருடம் அதமபலனுய் நடக்குமென்று சொல்வீர்கள்.

## அவிட்ட நட்சத்திரத்தின் பலன்

இன்பமாகஅவிட்டமென் றுரைத்தாரானுல்
இராஜயோகத்திற்கிசைந்த சுகமாய்வாழ்வார்
நன்மணமுங்கூடும் உத்யோகமேன்மை
நாடியேவர்த்தகத்தில் லாபமுண்டு
பொன்பொருளும்பூஸ்திதியும் மிகவேபெற்று
போனவர்கள்திரும்புவார் பூமிலாபம்
வின்னமிலாவிதைத்திட்ட தானயமெல்லாம்
விளேந்துபயிரோங்கியே செழிக்குந்தானே. 26

உரை :—ஆருடங்கேட்க வந்தவர்கள் அவிட்ட நட்சத்திர மென்று உரைத்தால் இராஜயோகத்தைப்போல் பலவிதநன்மை யனுபவித்து வித்யாபிவிர்த்தியுடன் உத்தியோக மேன்மையும், வியாபார லாபமும்பெற்று, சுகஜீவியா யிருப்பதுடன் கலியாணங் கூடும். மனேவி மைந்தர் பந்துமித்ரர்களுடனே சுகானந்தமா யிருப்பதுடன், தனந்தான்ய சம்பத்துடனே வாழ்ந்திருப்பதற் காகும்.

## சதைய நட்சத்திரத்தின் பலன்

கலவரமாய்ஆருடம் வந்துகேட்போர்
கலக்கமுடன் சதையநட்சத்ரமென்றுல்
நலமில்லே துன்பமுண்டு திகிலுமாகும்
நாடியதோர்காரியங்கை கூடாதப்பா
பலமில்லேவறுமையினுல் கஷ்டமுண்டு
பரிதியெனும்சூரியனே பூஜைசெய்தால்
சிலநாளேக்குள்ளாக வெகுலாபங்கள்
சித்திக்கும்சுகமாக வாழ்வாரென்பீரே. 27

உரை :—மனதிகிலுடன் ஆருடங் கேட்க வந்தவர்கள் சதைய நட்சத்திரமென்றுரைத்தால் அவர்கள் நினேத்த காரிய மாகாது பலவிதமாகிய துன்பத்தாலும் துயரத்தாலும் மனதிகி லடைந்து யாதொரு காரியத்திலும் பிரவேசிக்க மனமில்லாமல் உத்தியோக ஸ்தானத்தில் கலகமும், வியாபாரத்தில் நஷ்டமு மடைந்து வறுமையால் கலங்குவார்கள். ஆகையால், அதிகாலே

யிலெழுந்து ஸ்நானபானஞ் செய்து சித்தசுத்தி பக்தி வைராக் யத்துடன் சூரிய பூஜை செய்துகொண்டிருந்தால் பலவித துன்பமும் நீங்கி பகைவரெல்லாம் துணையாவார்கள். உத்தியோக மேன்மையும் வியாபார லாபமும் கிடைத்து தனவந்தராய் ஜீவித் திருப்பீர்களென்று சொல்வீர்கள்.

## பூரட்டாதி நட்சத்திர பலன்

பொறுமையுடன் ஆருடங் கேட்கவந்தோர்
பூரட்டாதிநக்ஷத் திரமென்ருலே
சிறுமையில்லைபெருமையுண்டு நினைத்ததெல்லாம்
சித்திக்கும்உத்தியோகம் வர்த்தகத்தால்
பொருள்சேரும்தனந்தான்ய சம்பத்துண்டாம்
புத்திரபாக்கியமுண்டு புகழுங்கீர்த்தி
வருகுமப்பாபிரபுவென மனமுங்கூட்டும்
வையகத்தில்பந்துமித்திரர் துணைசெய்வாரே. 28

உரை :—மிகவும் பொறுமையுடனே வந்து ஆருடங் கேட் பவர்கள் பூரட்டாதி நக்ஷத்திரமென்ருல் வெகு நன்மையான பலனுகிய உத்தமமாகும். உத்யோக மேன்மையாலும், வர்த்தக லாபத்திலும் வெகு பொருள் சேகரித்து தனதான்ய சம்பத் துடனே சிறுமையில்லாமல் பெருமையாக கீர்த்தியுடன் பிரபு வென்று சகலரும் புகழ்ந்துரைக்கும்படியான கௌரவமுண் டாகும். கலியாண சுபகாரியமும் புத்திர சம்பத்தும் பந்துமித் திரர் சகாயமு முண்டாகும். உலகத்தில் சதாகாலமும் மனேல் லாசமா யிருப்பதற்காகுமென்று சொல்வீர்கள்.

## உத்திரட்டாதி நட்சத்திர பலன்

உத்திரட்டாதியென் றுரைத்தாராகுல்
உறவினரும்பந்துமித்திரர் பகையாவார்கள்
உத்தியோகமில்லாமல் வர்த்தகஞ்செய்யாமல்
உணவின்றிவறுமையினுல் திகைப்பாரப்பா
எத்ததியும்துன்பமுண்டு கஷ்ட நஷ்டம்
எடுத்தகாரியமெல்லாம் கைகூடாது
சித்திவிநாயகர்பூஜை செய்திருந்தால்
சிறுமையில்லாசுகமுடனே ஜீவிப்பாரே. 29

உரை :—ஆருடங் கேட்கவந்தவர்கள் உத்திரட்டாதி நக்ஷத் திர மென்றுரைத்தால் அவர்கள் தமது பந்துமித்திரர் உறவினர்க் கும் பகையாயிருப்பதுடன் ஜீவிப்பதற்கிசைந்த உத்தியோகமில் லாமல், வர்த்தகஞ் செய்யாமலும் மனவிசார மடைந்தவர்களாய் புசிப்பதற்குணவில்லாமல் அன்னவஸ்திரத்திற்குப்பஞ்சமாய்சதா

காலமும் துன்பமும் துயரமு மனுபவிப்பதற்காகும். எடுத்த காரியம் சித்தியாகாது. ஆகையால் தினந்தோறும் விநாயகர் பூஜை செய்துக்கொண்டிருந்தால் கஷ்டநஷ்டமில்லாமல் சகலரும் துணையாய் விளங்கி உத்தியோகங் கிடைத்தும், வியாபாரத்தில் லாபம் பெற்றும் வறுமை யில்லாமல் பெருமையாய் வாழ்ந்திருப்பீர்க ளென்றுரைப்பீர்கள்.

## ரேவதி நட்சத்திர பலன்

அன்புடனேரேவதியின் பேரைச்சொன்னால்
அஷ்டலக்ஷ்மி கடாக்ஷங்களுண்டு
நன்மையுடன்மணங்கூடும் உத்தியோகங்கிட்டும்
நாடியதோர்வியாபார லாபமுண்டு
பொன்பொருளும்மிகப் பெருகும்புத்திரபாக்கியம்
பொறுமையுடன்பந்துமித்திரர் மனையாள்சுற்றம்
இன்பமாய்பலநாளும் சகாயஞ்செய்ய
இனிமையுடன்வாழ்ந்திருப்பா ரெனச்சொல்வீரே. 30

உரை :—ஆருடங் கேட்கவந்தோர் ரேவதி யென்று சொல்வாரானால் அஷ்டலக்ஷிமி கடாக்ஷமுண்டு. அநேகவித நன்மையும் பொருந்தி, உத்தியோக மேன்மையும் வியாபார லாபமும் பெருகி பொன் பொருள் பூஸ்திதியுடன், கலியாணம் சுபகாரியம் முதலான நன்மையும் புத்திரபாக்கிய சம்பத்தும், பந்துமித்திரர் சகாயமும் பெற்று சுகஜீவியா யிருப்பார்களெனச் சொல்வீர்கள்.

## நட்சத்திர ஆருட பலன்

முற்றிற்று.



நாலுநாலுபாதமாக பனிரெண்டு ராசியை பிரித்து

ஜெனித்த ஸ்தானம் முதலிய

அடையாளங்களைக் குறிப்பிட்டுச் சொல்லும்

# காக்கயர் நூல்

### மேஷம் முதற்பாகம்

மேடமுதலக்கினந்தா னுதயமாகில்
விளம்புகிறேன்வடக்கதுவே வீதியாகும்
ஆடழகுகுளங்கிணறு மருகேநிற்கும்
அந்தமனையிருந்து கட்டினதேயாகும்
நீடியதோராலயங்கள் தெற்கேயாகும்
நேர்வடக்குவாலயமு மிடிந்துகாட்டும்
பாடுமுள்ளவீதியிலோர் கணேசருண்டு
பாடினேனுடியொன்று பரிந்துபாரே. 1

### மேஷம் இரண்டாம்பாதம்

மேடமென்றலக்கினந்தான் இரண்டாம்பாதம்
விளம்பியதோர் கீழ்மேற்கு வீதியாகும்
பாடுற்றகுளங்கிணறு மெதிராய்த்தோன்றும்
பரிவானவாலயமே வாய்வின்றிக்கில்
நீடியதோர்நேர்மேற்கிற் குண்டமொன்று
நிறைதெற்குவடக்குமொரு வாழியாகும்
ஆடையுடனடுத்தமனை பாழேயாகும்
அதற்கேற்றமண்ணுமனை யறிவித்தோமே. 2

### மேஷம் மூன்றும்பாதம்

குறியிலிவன்ஜெனனமது மூன்றும்பாதம்
கூறுவேன்வடக்குதெற்கு வீதியாகும்
சரியாயிருபுரமுந் தடுத்தவீடு
தானிருக்குந்தெருவாயிற் கிழக்கேசொல்லும்
பெரியகன்னிநகரமதி லீசன்கோஷ்டம்
பேசினேன்மேற்குதிக்கிற் கணேசன்கோயில்
அருகாகவம்மனையிற் சாத்தான்குறவன்
[illegible] 3

## மேஷம் நான்காம்பாதம்

தகரதில்நாலாம்பாதந் தன்னிலேஜெனனமானுல்
புகல்வதுகிழக்குமேற்கு புகன்றிடுந்தெற்குவாசல்
மகரசிங்கத்திற்குண்ட மங்கொருகோயில்தோப்பு
நிகர்துலேமேஷஞ்சாத்தா னிருக்குமேகுண்டமொன்றே. 4

---

## ரிஷபம் முதற்பாதம்

குண்டையிவன்பிறந்துவந்த வீதிதன்னைக்
கூறுகிறேன்தென்வடக்கு வீதியாகும்
அண்டமெனுமிவன்வாசற் கிழக்கேயாகும்
அதற்கருகில்மூன்ரும்வீ டதுவும்வின்னம்
பண்டையென்னும்தென்கிழக்கிற் றடமேயாகும்
பகர்கன்னிபுத்திரத்தி லீசனுழி
கெண்டையெனுங்கயல்விழியாய் ரிஷபந்தேளும்
கிராமத்திற்குடியிருப்பு கணேசன்துர்க்கை. 1

## ரிஷபம் இரண்டாம்பாதம்

விடையிலிவன்பிறந்துவந்த ரெண்டாம்பாதம்
விளம்புகிறேன்கீழ்மேற்கு வீதியாகும்
நடையுலவுவாசலது தெற்கேயாகும்
நாட்டுகிறேன்கீழ்மேற்கு கணேசன்குண்டம்
படையிலிவன்மிதுன துலாங்கும்பந்தன்னிற்
பாடுகிருர்மையன்துர்க்கை மாரியென்று
குடையிலிவன்கும்பத்தில் வாழுந்தெய்வம்
கொல்லையிலேகுடியிருப்பா மென்றுகூரே. 2

## ரிஷபம் மூன்ரும்பாதம்

புல்லிடபமிவன்ஜெனன மூன்ரும்பாதம்
புகலுகிறேன்தென்வடக்கு வீதியாகும்
கல்வியுடனவன்வாசல் மேற்கேயாகும்
காட்டுமேயத்தெருவிற் கணேசன்கோயில்
செல்லுமேமேடமது தனுசுதன்னில்
சிவன்சத்திகுண்டமென்று செப்பலாகும்
வல்லமையாமிவன்குடும்பந் தன்னில்வாழும்
மாமதுரைவீரனென்று வகுத்துச்சொல்லே. 3

## ரிஷபம் நான்காம்பாதம்

ரிஷபமேநான்காம்பாதம் நேருடன்கிழக்குவீதி
அழகியவடக்குவாசல் அதிலிருகும்பமுண்டு
பழகியகிழக்கில்குண்டம் பதிந்திடுங்கோயிலுண்டு
அழகியசாத்தான்கோயி லம்மையாம்வடபுரத்தில். 4

---

## மிதுனம் முதற்பாதம்

மிதுனமுதற்பாதமதி லுதயமாகில்
விளம்புகிறேன்தென்வடக்கு வீதியாகும்
இதரமெனுமிவன்வாசல் கிழக்கேயாகும்
யிவனில்லத்தண்டைசந்து பாழதாகும்
மிதுனமதில்மேற்கதிலே குண்டங்கோயில்
மேலீசன்சூழ்சத்தி கால்வாயொன்று
அதன்மேலுமிவன்குடியை யாளுந்தெய்வம்
அயலூராமென்றுசொல்லி அறிவித்தோமே. 1

## மிதுனம் இரண்டாம்பாதம்

தண்டிலிவன்ஜெனனமது விரண்டாம்பாதம்
தானதுவேகீழ்மேற்கு வீதியாகும்
அண்டியிவன்வாசலது தெற்கேசந்து
அதன்மேலேசூட்சியொன்று கோயிலுண்டு
கண்டுமிவன்வடதிக்கின் றென்பால்கீழ்பால்
காவியொன்றுகால்வாய்நீ ரோடையொன்று
கொண்டோடியிவன்றனையே காக்குந்தெய்வம்
கூறுமக்கினிவாயுவே குறித்துச்சொல்லே. 2

## மிதுனம் மூன்றும்பாதம்

ஆழியிவன்ஜெனனமது மூன்றும்பாதம்
அதுதெற்குவடக்குள்ள வீதியாகும்
தாழியிவன்றலைவாசல் மேற்கேயாகும்
சாற்றினேமைக்கினியில் சாத்தான்மாரி
ஆழியிவன்றேள்ரிஷப ராசிதன்னி
லூற்றுகெங்கைசடையணிந்த வீசனில்லம்
வாழியிவன்றென்புரத்திற் றேருங்கோயில்
வகுத்துரைத்தபுஜண்டருட வாக்குத்தானே. 3

## மிதுனம் நான்காம்பாதம்

நல்வினைராசிதன்னில் நான்காம்பாதம்
நாடிவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
பல்வினையாலிவன்வாசல் வடக்காமில்லம்
பாருமதுசொந்தமில்லை பிறர்தன்வீடு
சொல்வினையாருசிகும்பம் துலையிற்குண்டம்
சொல்லுமதிற்சிவன்சத்தி சாத்தான்கோஷ்டம்
வெல்வினையாமிவன்குடும்பந் தன்னைக்காக்கும்
வேல்மதுரைசொக்கலிங்க வீரன்றானே. 4

---

## கடகம் முதற்பாதம்

கொண்டலெனுங்கடகமதி லுதயமாகிற்
கூறுவேனவன்வீதி வடக்குதெற்கு
விண்டவன்றன்வாசலது மேற்கேயாகும்
மிவனில்லந்தன்னருகிற் குண்டமுண்டு
பண்டலெனுந்துலாங்கும்ப மேடந்தன்னிற்
பண்பானகோயில்சத்தி சாத்தான்மாரி
விண்டலெனுமிவன்தெருவில் விளங்குந்தெய்வம்
வேல்முருகக்கடவுளென விளம்பலாமே. 1

## கடகம் இரண்டாம்பாதம்

நண்டிலுறுஜெனனமது விரண்டாம்பாதம்
நாடிவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
அண்டியிவன்வாசலது தெற்கேயாகும்
மனையெதிரிற்சந்துயெதிர் வீடுமில்லை
கொண்டலிவன்குடியிருப்பு ரெண்டாம்பாதம்
கூரக்கினிமேடந்துலாங் கும்பங்குண்டம்
வண்டிவிவன்வாழுமிந்த வீதிதன்னில்
வருஞ்சுழிமதன்கோஷ்டங் கடகந்தானே. 2

## கடகம் மூன்றும்பாதம்

சேர்க்கையெனுமிவன்ஜெனன மூன்றும்பாதம்
ஜெனித்துவந்தசுதன்வீதி வடக்கேயாகும்
வேர்க்கையிவன்றலைவாசல் கிழக்கேயாகும்
மேஷதுலாமிதுனத்திற் குண்டங்கோயில்

ஆக்கையெனுந்தேள் மகர மைய்யனம்மை
யானகடைவீதியொன்று கால்வாயொன்று
சேர்க்கையெனுமாதேகேள் புஜண்டர்வாக்கை
செப்பினதோர்நூல்தனிலே தப்பிராதே. 3

## கடகம் நான்காம்பாதம்

நன்னியென்னும்நண்டதனி னான்காம்பாதம்
நாடிவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
சென்னியெனுமிவன்வாசல் வடக்கேயாகும்
திகழ்கன்னிசத்திரமு மீசன்கோவில்
கன்னியெனுந்தேள்மிதுனம் காரிகோஷ்டம்
காரகத்திலரசுகுண்டங் காளிகோயில்
வன்னியிவன்குடியதனில் வாழுந்தெய்வம்
மதுரைவீரன்சத்தியொன்று வகுத்துச்சொல்லே. 4

---

## சிங்கம் முதற்பாதம்

சிங்கமெனுமிலக்கினந்தா னுதயமாகில்
சிறப்பானகீழ்மேற்கு வீதியாகும்
பங்கமெனும்பிதிர்குடும்ப மூன்றேயாகும்
பாலனிடவாசலது தெற்கேயாகும்
இங்கேயெனுமிருபுறமுஞ் சந்தேயாகும்
இயல்பானமேற்புறத்திற் கோயிலாகும்
தங்கவேவெகுகாலத் தியோகவானுஞ்
சாற்றுகிறேன்கீழ்திசையிற் றடாகமுண்டே. 1

## சிங்கம் இரண்டாம்பாதம்

சிங்கமெனுமிலக்கினந்தா னிரண்டாம்பாதஞ்
சிறப்பானதென்வடக்கு வீதியாகும்
அங்கமிலாதிதிற்பிறந்த மனையிற்றோட்டம்
அம்மனையின்முன்புறமே கட்டிநிற்கும்
சங்கையறரிஷபகன்னி மகரராசி
சாரிற்சிவலிங்கமொன்று வாழியொன்று
திங்களணிகடகமது லக்கினாதி
சேர்ந்திருக்கின்விழல்வீடு தானுண்டாமே. 2

### சிங்கம் மூன்றும்பாதம்

தானமாம்புவியிலிவன் மூன்றும்பாதம்
　　தான்வந்தசுதன் வீதி கிழக்குமேற்கு
ஆனயிவன்றலேவாசல் வடக்கேயாகும்
　　அந்தயில்லந்தன்னருகிற் பாழதாகும்
மானமகாமேடதனு மீனஞ்சாத்தான்
　　மாகாளிகுலமதனை கார்க்குந்தெய்வ
கானசத்திபாவாடை ராயனங்கே
　　காத்திருப்பாரெக்காலுங் காவலாமே. 3

### சிங்கம் நான்காம்பாதம்

அரியதனிலிவன்ஜெனனம் நான்காம்பாதம்
　　ஆகிவந்தசுதன்வீதி வடக்குத்தெற்காம்
தலேயிலிவன்வாசலது மேற்கேயாகும்
　　சாற்றுகிறேமிவன்வீட்டி லிருபாலில்லம்
எரிமேடந்துலாமகர ராசிதன்னில்
　　இருக்குமதுசூழிகுண்டடங் கோயிலொன்று
சரியில்லேகார்க்கவந்த பெரியதெய்வம்
　　தானடிமையிவனெனவே சாற்றலாமே. 4

---

### கன்னி முதற்பாதம்

கன்னியெனுமிலக்கினந்தா னுதயமாகில்
　　கனமாககீழ்மேற்கு வீதியாகும்
உன்னதமாய்தென்வாசல் மேற்கேகோஷ்டி
　　யுயருகின்றவாலயமு மெதிரேதோன்றும்
மன்னியவர்கீழ்புறத்தில் நீராடும்வாய்க்கால்
　　வாழையுடன்தேங்கமுகு தோன்றும்பாரு
மன்னவனுர்புஜண்டரவர் சொன்னதாலே
　　வளமறிந்துதிடமுடனே வரையலாமே. 1

### கன்னி இரண்டாம்பாதம்

தெரிவையெனுமிலக்கினந்தா னிரண்டாம்பாதம்
　　ஜெனித்துவந்தசுதன்வீதி வடக்குதெற்கு
அரிவையெனுமிவன்வாசல் கிழக்கேயாகும்
　　அவ்வில்லத்தருகிற்குண்டம் எதிரேகாலி

தரிவையெனுந்தனுர்மீனம் வடக்கேசாத்தான்
சாதுகன்னியீசனில்லங் கிழக்கேகுண்டம்
கருவிலிவன்குலங்கார்க்குங் கருப்பன்மாரி
கதித்தபஞ்சபாண்டவர்க்கே சகாயனென்னே. 2

## கன்னி மூன்றும்பாதம்

சேடிதனிற்ஜெனனமது மூன்றும்பாதம்
ஜெனித்துவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
பாடியிவனில்லமதுக் கருகிற்சந்து
பகருவேன்றலைவாசல் வடக்கேயாகும்
ஆடியதோரம்பலவன் கணேசன்கோயில்
அதுமகரமேடசிங்க மறிந்துகொள்ளு
கூடியிவன்குடும்பத்தைக் காக்குந்தெய்வங்
குணவீரனென்றுமிவை கூறலாமே. 3

## கன்னி நான்காம்பாதம்

கையதனிற்கனலேந்துங் கன்னியென்றும்
காணயிந்தசுதன்வந்த நான்காம்பாதம்
வையமிவன்வீதியது வடக்குத்தெற்கு
வளமானதலைவாசல் மேற்கேயாகும்
செய்யயிவன்மனைக்கருகிற் சந்துமுண்டு
செப்புகிறேன்கீழ்மேற்கு குண்டங்கோஷ்டம்
மெய்யிலிவன்குலங்கார்க்குந் தெய்வமெல்லா
மேல்வடக்குத்தெற்கிலொரு கோயிலுண்டே. 4

---

## துலாம் முதற்பாதம்

சீரானதுலாமதிலே தோன்றுமாகில்
சிறப்பானகீழ்மேற்கு வீதியாகும்
பேரானவடவாசல் மேற்கேகோயில்
பெரிதானகொல்லையிலே புளியனுர்த்தை
கூரானகுலமெட்டில் குடும்பந்தன்னில்
குண்டமாங்கோயிலொன்று குறித்துச்சொல்லு
ஆரானயிவன்குலத்தை யாளுந்தெய்வம்
ஆடுபன்றிகோழிகொல்லும் மாண்டவன்றான். 1

## துலாம் இரண்டாம்பாதம்

கோலமிதிலிவன்ஜெனன மிரண்டாம்பாதம்
குறித்துவந்தசுதன்வீதி வடக்குத்தெற்கு
ஏலவிவன்றலைவாசற் கிழக்கேயாகும்
இருபுறமுமில்லமது கிழக்கேயுண்டாம்
சாலதனுர்கடககுண்டஞ் சாத்தான்மாரி
சாற்றுவேன்தெருவீதி மதவேள்கோட்டம்
வேலவனுர்குலமதனில் விளங்குந்தெய்வம்
வெரித்தகள்ளுசாராயம் விரும்புவோனே. 2

## துலாம் மூன்றும்பாதம்

செட்டியெனுமிவன்ஜெனன மூன்றும்பாதம்
ஜெனித்துவந்தவிவன்வீதி கிழக்குமேற்கு
திட்டியெனுமிவன்வாசல் தெற்கேயாகும்
தேள்மீனமேஷமதிற் சனங்கள்கோஷ்டம்
வட்டியெனும்வாசலிலே மரங்களுண்டு
வளர்மேஷம்துலைமகரம் குண்டஞ்சூழி
கட்டியிவன்குலமதனைக் கார்க்குந்தெய்வம்
காளிசத்திபாவாடை ராயன்ருனே. 3

## துலாம் நான்காம்பாதம்

வணிகனெனுமிராசிதனி னுன்காம்பாதம்
வந்துதித்தான்வீதியது வடக்கேயாகும்
அணிகனெனுமேல்வாசற் றெற்கேதோப்பு
அந்தயில்லத்தருகினிற்சந் தடுத்துப்பாரு
குணிகடகந்தனுர்மேடம் கோயிற்குண்டம்
கூறுமிவன்றெருவீதி குடியாங்காளி
கணிகனெனுமிவன்குலத்தைக் கார்க்குந்தெய்வம்
காத்தவனுர்மாரியென்றுங் கருதிச்சொல்லே. 4

---

## விருச்சிகம் முதற்பாதம்

அறிவதென்னவிருச்சிகந்தா னுதயமாகில்
அப்பனேகீழ்மேற்கு வீதியாகும்
தெரிவதென்னதென்வாசல் மேற்கேகோயில்
செப்புகிறேன்மேற்புரத்திற் றடாகமொன்று

திரிவதென்னகீழ்ப்புர நீரோடும்வாய்க்கால்
ஸ்திரமாகமரமுண்டு வறிந்துகொள்ளு
பிரிவானவடபுறத்திற் பிடாரிகோயில்
பேரானபாட்டையொன்று தோன்றும்பாரே. 1

### விருச்சிகம் இரண்டாம்பாதம்

பத்துடையதேளில்வந்த விரண்டாம்பாதம்
பாருமிவன்றெருவீதி வடக்குத்தெற்கு
கொத்துடனேயிவன்வாசற் குறியேமேற்கு
கொல்லையினிற்குலதெய்வங் குடியிருப்பாம்
கத்துடையகூக விருச்சிகமீனத்தில்
காவிகுண்டங்கால்வாய் நீரோடுங்கோயில்
சத்துடையவிவன்வீட்டிற் றிருபாலில்லம்
சாற்றுகிறேமேஷங்கன்னி சாத்தான்மாரி. 2

### விருச்சிகம் மூன்ரும்பாதம்

தேளதனிற்தெருக்காலிற் மூன்ரும்பாதம்
செனித்துவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
ஆளனில்லமிவன்வாசல் வடக்கேயாகும்
அதுசந்துக்கடுத்தவீ டதுவுமாகும்
மீளனெனுமேடசிங்கங் கால்வாய்த்தோட்டம்
மிகமகரங்கன்னிகுண்டங் கோயிலாகும்
கோளனெனுங்குலதெய்வங் குடியன்வீரன்
கொல்லையிலேகுடியிருப்பா மென்றுகூறே. 3

### விருச்சிகம் நான்காம்பாதம்

விட்டதொருதேளதனி னுன்காம்பாதம்
விளம்பிவந்தசுதன்வீதி வடக்குதெற்கு
கிட்டியிவன்றலைவாசற் கிழக்கேயாகும்
கேளிருவர்பாரமுமாய் குடியிருப்பு
தொட்டதனூர்மேடகுண்டஞ் சத்தியோகம்
சொல்லுமதியீசன்பதி யீசானியத்தில்
கட்டியிவன்குடியைநிதங் காக்குந்தெய்வம்
கருப்புகச்சைகட்டுகிற வீரன்ருனே. 4

---

## தனுசு முதற்பாதம்

தனுசுலக்கினமேயாகிற் றகமையாங்கிழக்குமேற்கு
மனையுடன்மற்றவாசல் மருவியேகட்டிரண்டாம்
அனுதினம்பூசைசெய்யு மரன்கோயில்மேற்கேயுண்டு
கனமதாய்தெற்கில்தோப்பு காவிசூழ்பாளுண்டாமே. 1

## தனுசு இரண்டாம்பாதம்

வின்னதனில்ஜெனனமது ரெண்டாம்பாதம்
விளங்கிவந்தசுதன்வீதி வடக்குத்தெற்கு
சொன்னதொருமேல்வாசல் மிதுனகுண்டம்
சூழுமதின்காவியொன்று கால்வாயொன்று
அன்னதொருமேடதுலை யயினார்கோவில்
ஆனதொருவீதிதனில் மதவேள்சாதி
இன்னவன்றன்குலமதனைக் காக்குந்தெய்வம்
இருவகுப்பாமென்றெடுத்து வியல்பாய்ச்சொல்லே. 2

## தனுசு மூன்றாம்பாதம்

காண்டிபம்வந்திவன்ஜெனன மூன்றாம்பாதம்
காணவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
ஆண்டயிவன்றலைவாசல் வடக்கேயாகும்
அதனருகில்ஐயனார் சத்தியாகும்
பூண்டதுவுமேஷமதிற் குண்டங்கோஷ்டம்
புகழானசிலநாளிற் றருக்களுண்டு
ஆண்டயிவன்குலதெய்வ மையன்காளி
ஆகமிவனுமெனவே யறியலாமே. 3

## தனுசு நான்காம்பாதம்

கார்முகத்திலிவன்ஜெனனம் நான்காம்பாதம்
காணவந்தசுதன்வீதி வடக்குத்தெற்கு
ஏர்முகத்திலிவன்வாசற் கிழக்கேயாகும்
யெதிர்வீடுபாழெனவே யிருக்குஞ்சூழி
பேர்முகத்தில்மேஷகன்னி துலையிற்குண்டம்
பேசலாமரங்கோஷ்ட மீனங்கால்வாய்
கோமுகத்திலிவனடியைக் காக்குந்தெய்வங்
கெஜவீரனுமவனைத் தெரிந்துகொள்ளே. 4

---

## மகரம் முதற்பாதம்

மகரலக்கினமேயாகின் மருவியகிழக்குமேற்கு
அகமதுதெற்குவாச லதற்கெதிர்சந்துமுண்டாம்
ஜெகம்புகழ்கோயில்மேற்கு செப்புநீர்குளமுமுண்டு
வகையுடன்மரங்கள்சூழ்ந்த வரிசைகள்தானுண்டாமே. 1

## மகரம் இரண்டாம்பாதம்

கேதுவெனும்லக்கினந்தா னிரண்டாம்பாதம்
கேடுறுமைந்தன்வீதி வடக்குத்தெற்கு
வாதுருந்தலைவாசற் கிழக்கேயாகும்
வந்தயில்லம்மூன்றிலோர் பங்குமாகும்
பாதுதலைமேஷதண்டு மகரமீனம்
பாரிதிலேகோயிலொன்று பகரலாகும்
வேதியன்றன்குலங்காக்குந் தெய்வமாங்கே
வேள்மதுரைவீரனென்றே விளம்பலாமே. 2

## மகரம் மூன்றும்பாதம்

மான்கலையிலிவன்ஜெனன மூன்றும்பாதம்
வந்துதித்தோன்வீதியது கிழக்குமேற்கு
வான்கலையிலிவன்வாசல் வடக்கேயாகும்
மானகுண்டமேஷதுலை மகரமாகும்
ஒன்கலையில் ரிஷபகன்னி மகரந்தன்னி
லோதுகங்கைசடையணிந்தோ ரீசனையன்
என்கலையாக்குலங்காக்குந் தெய்வங்கேளா
யென்னபெரியாண்டவன்றன் பத்தியாமே. 3

## மகரம் நான்காம்பாதம்

புல்வாயில்யிவன்ஜெனனம் நாலாம்பாதம்
பொருந்திவந்தசுதன்வீதி வடக்குத்தெற்கு
மெல்வாயின்றலைவாசல் மேற்கேயாகும்
மேஷமாந்துலைமகரங் குண்டங்கோயில்
பல்வாயிலிம்மனையோ விரண்டுபாகம்
பாரதற்குமெதிரில்லம் பாழதாகும்
சொல்லயிவன்குலதெய்வ மையன்சத்தி
தூழ்பெரியாண்டவன்றன் பத்தியாமே. 4

## கும்பம் முதற்பாதம்

கும்பலக்கினமேயாகிற் குலவியவடக்குத்தெற்கு
சம்பிரமாம்கிழக்குவாசற் றடாகமுங்கீழ்மேலுண்டு
கும்பலாயரசுமேற்கு கூறியகிணறுமுண்டு
இன்பமாய்விஷ்ணுகோயி லிருந்திடுந்தப்பிராதே. 1

## கும்பம் இரண்டாம்பாதம்

கொட்டுகும்பலக்கினந்தா னிரண்டாம்பாதம்
கூறிவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
தெட்டலிவன்றலைவாசல் மேற்கேயாகும்
தேள்கடகமகரகன்னி குண்டங்கோயில்
வட்டலிவனீசன்றிக்கில் வடபால்மேலே
மணையிடிந்துகலந்துநிற்குங் கண்டுகொள்வாய்
தொட்டனிவனதற்கப்பால் மணவியும்பாழாம்
சொல்லுமிவன்குலதெய்வந் துர்க்கைவீரன். 2

## கும்பம் மூன்றும்பாதம்

செட்டுதனில்ஜெனனமது மூன்றும்பாதம்
ஜெனித்துவந்தசுதன்வீதி வடக்குத்தெற்கு
வெட்டிதனிற்றலைவாசல் மேற்கேயாகும்
மேஷதுலைதேள்தனக்குக் குண்டங்கோயில்
பொட்டிவிவன்பிறந்தமனை சொந்தமல்ல
பேசுமனையயலார்தன் குடியிருப்பு
குட்டிவிவன்குடிவிள்க்குந் தெய்வங்கேளு
கொடியபெரியாண்டவனுங் கூறுவாயே. 3

## கும்பம் நான்காம்பாதம்

குடமதனிவிவன்ஜெனனம் நாலாம்பாதம்
கூடிவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
வடமதனிற்றலைவாசல் வடக்கேயாகும்
ஆனதொருகொல்லையிலே சூழிபத்தும்

இடமதனில்துலைமகர மிரண்டுசூழி
யெதிர்த்ததொருதேள்மிதுன மீசன்கோயில்
வடமதனில்வாழுமிவன் குலதெய்வந்தான்
வாழ்சத்திவீரன்முனி யென்றுசொல்லே. 4

---

### மீனம் முதற்பாதம்

மீனத்திற்றேன்றியவன் முதலாம்பாதம்
விளக்கவந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
தானமதிலமர்ந்திருக்கும் வடக்குவாசல்
தன்னிலோர்குண்டமென்று சார்ந்திருக்கும்
ஆனதொருகன்னிகுண்டங் கோயிலொன்று
அக்கினியில்வடக்குண்டு சாத்தான்மாரி
கானயிவன்கருக்குலத்தைக் காக்குந்தெய்வம்
கண்டுசொல்லுபொம்மியம்மன் வாழதாமே. 1

### மீனம் இரண்டாம்பாதம்

சேலுடையமீனத்தி னிரண்டாம்பாதம்
ஜெனித்துவந்தவீதியது வடக்குத்தெற்கு
யேலுடையயிவன்வாசற் கிழக்கேயாகும்
யென்றதுலைமகரகன்னி குண்டங்கோயில்
மேலுமிவன்பிறந்தமனை சொந்தமல்ல
மேற்றிக்குவடுத்தமனை காலிசூழி
காலுமிவன்கருப்பத்திற் காத்தான்தெய்வம்
கண்டுசொல்லுங் காக்கயர்தன்வாக்குந்தானே. 2

### மீனம் மூன்றும்பாதம்

செங்கையெனும்கெண்டையதின் மூன்றும்பாதம்
தேறுமந்தசுதன்வீதி கிழக்குமேற்கு
அங்கையிவன்றலைவாசற் றெற்கேயாகும்
ஆனதுலைமகரகன்னி கோயிற்குண்டம்

மங்கைதருமேடசிங்க மங்கேகோஷ்டம்
வாசமில்லங்குடியிருப்பு சந்துவங்கே
இங்கேயிவன்குலதெய்வ மென்னவென்ருல்
ஈதுபெரியாண்டவனென் றியம்பலாமே. 3

## மீனம் நான்காம்பாதம்

மீனமெனுமிலக்கினந்தா ஞன்காம்பாதம்
மீண்டுவந்தசுதன்வீதி வடக்குத்தெற்கு
ஆனயிவன்றலைவாச லதுவுமேற்கு
அந்தயில்லந்தனக்குக்கீழ் மேற்கிற்குண்டம்
வானகன்னியிடமேற்கிற் கோயிலொன்று
வரும்வழியில்வாவியொன்று மருத்துச்சொல்லு
தீனமிவன்றெய்வமது தெற்கேயுண்டு
செல்லக்காளென்றுமதை தெளிந்துசொல்லே. 4

காக்கயர்நூல் முற்றிற்று.



# காக்கயர் வாக்கியம்

கரியவன்ஐந்தில் கனகனும்சேயும்
  காணவே மூன்றினிலமர
பரிதியும்புதனும் பதிந்திடவாக்கில்
  பண்சசியரவுமே வியமாய்
வரிபுகர்மாந்தி யுயிர்தனில் அமற
  வழங்கிய கேதவராறில்
குரியெனவுயிரும் கயிலெனப் பகர்வோம்
  குறித்திடும் அம்சமும் தனுசே. 1

தனுசெனமாந்தி யரவுமே வியத்தில்
  தண்சனிலாபத்தி லமர
அனுமறைதெசத்தில் ரவிபுகர் நவமாய்
  அன்புடன் புதன்சசிமூன்றில்
கனுவெனசேயும் ஐந்தினிலாக்ஷி
  கதித்திடும் சிசியவனுளாய்
பனுவெனப்பிறந்த ஜாதகர்தனக்கு
  பற்றியபலனது பகரே. 2

பகரென நிறமும் கருப்பினில் சமனும்
  பற்றியபகரமே யுள்ளான்
நிகரெனசுகஸ்தன் நின்மனக்கவடி
  நிலமதில் யோகவானுகும்
அகரெனப்புவியில் வாணிபசுகஸ்தன்
  வழங்கிய யூகவானிவனும்
துகரெனத்துன்ப வினைகளுமில்லான்
  துற்பலங்கொடுத்திடாச் செயலோன்
வகரெனவம்பு வழக்குகளுரைப்போன்
  வார்த்தையால் இஷ்டத்தில்சுகனே. 3

சுகனெனப்பிறந்த ஜாதகர்தனக்கு
  சுகமதாய் துணைகளுமில்லான்
இகமதில்கன்னி துணையதுயேகம்
  இருப்பெனப்பகர்ந்து இவர்க்கு
அகமதில்சுகங்கள் மிகுதிறமுள்ளான்
  அன்புடன்பிதாபொருள் குறைவோன்
ஜெகமதில்துணைபோல் இருந்தவள்நிதியும்
  [illegible] 4

பெலமதால்யோகம் தீர்க்கமென்றுரைத்தோம்
பிற்பலச்செயல்களு முடையான்
குலமதால்சுகமும் ராகுவின் திசையில்
குறித்தனர் பலபிணியிவர்க்கு
அலமெனச்சுகமாம் மறையவன் திசையில்
அன்புடன் தனதுநாளதனில்
சலமெனத்தருகாக்குறைவென உரைத்தோம்
சாத்தியசனி புதனுனே. 5

ஊனென அதனில்பலன் சமனுரைத்தோம்
உகந்திடும் தனவழிக்குறைவும்
கானெனமனமும் ஏற்கையையணுகா
காட்டிய சிகிபுகரவிபூண்
ஆணெனஇவர்க்கு தந்தையர்மரணம்
அன்புடன்மனமதிலக் குறைவும்
வாணெனப்பொருளும் மற்றவராலே
வந்துமே யணுகிடுமிவர்க்கே. 6

இவர்க்கென அதுவால்சுகங்களும்மேலாம்
இன்பமா யோகமுமமையும்
பவர்க்கெனபாக்கிய வழிதனில்சுகமும்
பற்றிய வாணிபயோகம்
நவர்க்கெனமேன்மை வரவரத்திறமாம்
நம்பிய செயல்களுங்காட்டும்
அவர்க்கெனசுகங்கள் சேயரவூணில்
அன்புடன் பலமதுவுரையே. 7

உரைஎனஇவர்க்கு யோகமும்சுகமாம்
உரைத்திடும் வரவதால்மேன்மை
கரைஎனத்தருகா சனிதிசையதனில்
காட்டியசுகமுடன் ஏற்கை
திரைஎனச்செல்வம் உண்டெனக்காண
தீர்க்கமாய் புதன்சிகிபுகளுண்
வரைஎனமேன்மை விவாகமுமிவர்க்கு
வழங்கிய இஷ்டங்கள்சுகமே. 8

சுகமதில்மேன்மை வரவினல்சிலவும்
சொல்லிய இயற்கையும்மேலாம்
அகமதில்சுகமும் அணிகிடுமிவர்க்கு
அன்புடன்ரவி சசிசேபூண்

வகரெனஅன்னை மரணமுங்காட்டும்
வழங்கிய அலைச்சலுமிவர்க்கு
வகமெனவம்பு பலமதுஅணுகா
வந்திடும் லாபத்தில் சமனே. 9

சமனெனில்சுகமாம் மறுமணமுரைத்தோம்
சாற்றிய அரவினூண்வரையாம்
பமனெனஇவனும் ஜென்மமுன்னதனில்
பாக்கிய பலனிலாதவனும்
அமனெனசிவனின் அருளினுலிவர்க்கு
அன்புடன்ஜெனனமும் இதுவாய்
கமனெனப்பொருளும் கன்னியால்கிடைத்து
காட்டிய இருமணமுறையே. 10

உரையெனஅதுவும் திரமெனப்பகர்ந்தோம்
உதகிடும் வாணிவாணிபமும்
நிரையெனப்புதல்வர் மூன்றுடன்கன்னி
நிற்குமென்றுரைத்தனர் இவர்க்கு
தரைதனில்பலன்கள் மேன்மையையடைவன்
தண்மையாய் மறையவனூணில்
குரையெனத்தருகா புதன்திசையதனில்
குறித்திடும் தனதுநாள்பகரே. 11

பகரெனஅதனில் பீடையும் விலகும்
பற்றிய சிகிபுகரவியூண்
துகரெனத்துன்ப வினைகளுமணுகா
தூரிஞேம் வாணிபலாபம்
தகரெனபாக்கிய வழிச்சிலவுண்டாம்
தங்கிய ரவிசசியரவூண்
அகரெனமேன்மை அணுகிடுமிவர்க்கு
அதில்மறையூணினில் அழிவே. 12

கரியவன்சசியும் அரவுரநண்டில்
கனகனும் சேயுரயெட்டாய்
பரியவன்ஆறில் பண்டிதன்புகரும்
பதிந்திட கோலினில்பிலமாய்
குரிசிசிதெசத்தில் மாந்தியும்கயலில்
கூருயிர்மரியென அமைத்தோம்
வரியெனஅம்சம் ரெட்டையாம் அரவும்
[illegible] 13

பகர்சசிஜந்தில் குருவுமேதேளாய்
பானுவும் வியத்தினில்அமர
நிகர்சனிமாநதி கயலினில்யென்றும்
நின்சிகி சேயவன்குடத்தில்
துகர்புதன்யெட்டில் சுக்கிரன்தனுவாய்
துலங்கிய சாதகன் தனக்கு
சுகர்நிர்சமன்போல் ஆகுமென்றுரைத்தோம்
அமைந்திடும் விவேகமுள்ளவனே. 14

உள்ளவன்சிலாக்கியன் மிகுமனதயிரியன்
உகந்திடும் செல்வநாமென்றும்
வள்ளலேசிலாக்கியன் வரவரயோகன்
வார்த்தையில் வித்தாரனுமிவனும்
தெள்ளனஅரசர் செயலுளதிரகான்
செகத்தினில் கீர்த்திவானுவன்
கள்ளனமனத்தன் வாகனயோகன்
கருவத்தில் சிறந்திடும்சுகனே. 15

சுகமெனகல்வி மூன்றெனஉரைத்தோம்
சூட்டியஅரசர் தன்லிவியும்
இகமதில்அதுவும் மிகுதிரமாகும்
இயற்கையாய் துணைகளும்பகர்வோம்
தகமெனத்துணையும் ரெண்டுமேதீர்க்கம்
தங்கிடும் கன்னிரெண்டுடனே
வகமெனமறுதாய் வழிதனில்துணையும்
வழங்கிடுமிவற்றுமே உரையே. 16

உரையெனயிவனும் சனிதிசையதனில்
இன்பமாய் அரவுனூணுதிப்பன்
நிரையெனபீடை காட்டியேவிலகும்
நின்றிடும் மரையினூணதனில்
துரையெனத்துன்பம் வந்துமேவிலகும்
துலக்கிய புதன்திசைதனதில்
கரையெனகுடும்ப பலன்மிகஅணுகா
காட்டிய சிகிபுகருணில். 17

ஊணினில்சிலாக்கியம் உயர்வுமேகாட்டும்
உகந்திடாபிணிவர விலகும்
காணனகாரிய குடும்பத்தில்வரலாம்
காட்டிய கல்வியும்யேற்கும்

பூணனபிரபல வாணிபமுயற்சி
புகந்திடும் யிட்டங்கள் முதலாய்
வேணனயோகம் ரவிசசிசேயூண்
வேண்டிய மணமதுபிலமே. 18

மணமதுபிலமாம் களத்திரத்தால்யோகம்
மார்க்கமாய் பிதாபிணிஉரைத்தோம்
குணமுளசேர்க்கை பணிமரையூணில்
கூறினேம் அரசரின்முயற்சி
சணமதில்தாயும் மரணமும்அடைவள்
சஞ்சலம் காட்டுமாமிவற்கு
ஞெணமதுதருகா மேலதாய்யோகம்
வுரைத்திடும் விவாகமொன்றுரையே. 19

உரையெனமேன்மை சனியினூணதனில்
உகந்திடும் கேதுவின்திசையில்
நிரையெனசெல்வம் மேலதாயுயரும்
நின்றிடும்சென்ம முன்னிவனும்
நிறையெனசேற நாட்டினில்மறையோன்
நின்றிடும் குலமதில்செனித்து
வரையெனசெய்த கொடுமையினதுவால்
வழங்கினன் யிழிகுலத்துதித்தே. 20

உதித்துமேசெய்த நன்மையின்பயனுல்
உகந்திடும் சோழநாட்டதனில்
கதித்துமேகலையின் வாணிபமுடைய
காட்டியபிதாவிடம் செனித்து
துதித்துமேயோகம் மிகுதியாய்அடைவன்
துலங்கியகுடும்ப தோஷத்தால்
விதித்துமேதந்தை தனக்கிருதாரம்
விளங்கிடும் தனக்கும்மவ்வழியே. 21

வழியெனரெண்டு தாரங்கள்தனக்கு
வழங்கிடும்புத்திரர் நான்காம்
களிபெறகன்னி ரெண்டிருதீர்க்கம்
காட்டினர்சென்மத்தின் வினையாம்
வழியுடன்புகன்றேன் திசைதனதூணில்
வழங்கிடும்பிதாவுமே அழிவன்
அழிவிலாயோகம் அரசர்சந்தோஷம்
அவனியில்மேலதாய்ப் பகரே. 22

பகரெனபாக்கியம் நிலம்பொருள்சேரும்
பற்றியசேய்சசி அரவூண்
நிகரெனசிம்மா சனமுதலுரைத்தோம்
நின்மறுதாயுமே அழிவள்
துகரிலாசெல்வம் அடைவநாமிவனும்
தூரிநேம் மறைசனியூணில்
அகரனபுவியில் தாரமொன்றெழியும்
அமைந்திடும் புதன்சிகியூணே. 23

ஊணினில்அரசர் யிட்டங்கள்யேற்கும்
அவனியில்வெல்வற் பகையும்
காணணபொருளும் செலவுமேஉரைத்தோம்
காட்டியரவிதிசை யதனில்
பூணணபிரபலம் மேலதாஅணுகும்
புகட்டியபணிமறை சனியூண்
ஆணணபுகறேன் ஊண்வறஆவி
அந்தகன் பதிக்கெனப்பகரே. 24

கரியவன்மாந்தி வாக்கினிலமர
கனகெனும் எட்டினில்மறைவாய்
பரிபுதன்மரியில் பார்க்கரவன்கயலாய்
பாழ்சிகி ஐந்தினில்பிலமாய்
குரிசசிவியத்தில் சேய்பணி எருதாய்
கூரஉயர்கடகமாய் அமைத்தோம்
வரிஎனஅமுசம் கோலென அதனேன்
வந்திட சாடியென்றுரையே. 25

உரையெனசனியும் கன்னியிலமர
உகந்திடும் சேய்புதன் அரியில்
நிரை என எல்லி மூன்றினிலமர
நீன்சசி ஆறினில் மறைவாய்
கரை எனபணியும் கனகெனும் எட்டில்
கரிமகன் சிகியுரவாக்கில்
துரைஎனக்கோட்கள் அமைந்த ஜாதகனுக்கு
துலங்கிய நிரம்சுகமிவர்க்கே. 26

இவர்க்கென ஏர்க்கை மிகுந்தயோக்கியனும்
இன்பமும்குணமிக அமைந்தோன்
நவர்க்கென தயிர ஸ்திரீவழிகவனன்
நம்பலாம் யோக்கியனென்றிவனே

துவர்க்கெனதும்ப வினைகளுமில்லான்
துர்மனகவடுகள் தருகா
அவர்க்கெனமேன்மை யரியநல்லுறவால்
அரசனின் இஷ்டனென்றுரையே. 27

உரை எனத்தந்தை பொருளது உள்ளான்
உகந்திடும் துணைகளும் இவர்க்கு
நிரைஎனரெண்டு தீர்க்கமொன்றுரைத்தோம்
நிலைத்திடும்கண்ணியும் அதுவாம்
வரையெனமற்றோர் தாய்தனிற்துணையும்
வழங்கிடுமிகுன்றன மிவர்க்கு
அரைஎனபுவியில் பிரபுவென் றுரைத்தோம்
அன்புடன் திசைபலபகரே. 28

பகரென அரவோன் திசைபுக லணில்
பாரினில்ஜெனிப்பனும் இவனும்
துகரெனசுகங்கள் சமனதாய்காட்டும்
துலங்கிடும் ரவிசசிசேயூண்
நிகரெனகுடும்ப வரவுகள்சமனும்
நின்றிடும் மறைதிசையதனில்
அகரெனகண்டம் காட்டியேவிலகும்
அதின்பலம் உயர்வெனச்சுகமே. 29

சுகமெனசவுரி புதசிகிலணில்
சூட்டினேம் உயர்ச்சியும்மேலாம்
நிகரெனகாணு யோகத்திலிவர்க்கு
நின்றிடும் புகரவியூணில்
வகரெனக்கெட்டி மனைவர உண்டாம்
வழங்கிய சேய்சசி அர லண்
அகிரெனசேர்க்கை மேலதாய்கல்வி
அமைந்திடும் மணமது பெலமே. 30

பிலமெனயோகம் பிதாபலவரவாம்
பிரியமாய் முயற்சியில் கவனம்
அலமிலாபெற்ற அன்னையுமடிவள்
அன்புடன் சனிதிசைதனதில்
சமமிலாசுகமும் பெருத்தவாணிபமாம்
வழங்கிடும் கடற்கரையதனில்
குலமெனசேர்க்கை மிகுபொருள் உயர்வாம்
கூறினேம்புந்தி லணிவர்க்கே. 31

இவர்க்கெனமேலாய் வாணிபமுயற்சி
இயம்பினேம் சிகிபுகர்ரவியூண்
நவர்க்கெனப்பொருளும் மேலதாய்லாபம்
நாட்டினபிதாவுமே அழிவன்
துவர்க்கெனபலமும் உயர்வெனபகர்ந்தோம்
துலங்கிய ஜென்மமுன்னிவனும்
அவர்க்கெனபாண்டி இழிகுலத்துதித்து
அன்புடன் சிவந்தனைப்பணிந்தே. 32

பணிந்திடும்செயலால் சோழநாட்டதனில்
பக்குவ நற்குலமதனில்
துணிவுடன்வாணி வாழியமைந்த
துலங்கியபிதா முதல்மனைவிக்கு
அணியெனத்துதியா புதல்வனுய்உதிப்பன்
கழிஎனஇவனும் முப்பிறப்பதனில்
காட்டினேம் செய்ததைக்கேளே. 33

கேளெனமிகுந்த அரசதைசெலுத்தி
கெட்டினன் குலமுதனிவனும்
நிரலெனஅந்ததோஷத்தால் இவர்க்கு
நிச்சயம் புத்திரதோஷம்
ஆணெனஅதுவும் விலகிடநீயும்
அன்புடன் சேதுவில்மூழ்கி
சூழெனதினத்தால் ஓமமும்செய்தால்
சுருக்கமாய் ஏகபுத்திரனே. 34

ஏகபுத்திரனும் இச்சென்மத்திலிவர்க்கு
இயம்பினேம் மறுபிறப்பிவனும்
பாகமாய்மேலோர் குலத்தினில்ஜெனித்து
பரகெதிஅடைவனும் இவனும்
தாகமாய் இச்சென்மத்திலிவர்க்கு
தங்கியசேய்சசி அரவோன்
யோகமும்மேலாய் உரைத்தனர்நலமாய்
உயர்ந்திடும் நிலசுகமனையே. 35

மனைமுதல்கட்டி கடனுடன்வரவும்
மார்க்கமாய் தூரத்தில் அலைச்சல்
வினையதுஅணுகா நஷ்டமும்காட்டும்
விளங்கிய புந்தியின் திசையில்

அணையெனத்தனது சிகிபுகரவியூண்
அதின்பலன் சமமெனபகர்ந்தோம்
கணை எனச்செல்வ வாணிபலாபம்
காட்டியசேயர ஊணே. 36

ஊணினிர்க்கூட்டு வாணிப நஷ்டம்
உகர்ந்திடும் வழக்குகள் சிலவும்
கானெனச்சுகங்கள் ஏத்திடுவிவர்க்கு
காட்டியமரை சனிஊணில்
வானெனப்புவியில் ராஜயோகமுமாம்
வழங்கிய சிகிதிசையதனில்
பூனெனச்சனியோன் ஊண்வர ஆவி
புகுந்திடும் எமபதிதனக்கே. 37

காக்கயர் வாக்கியம் முற்றிற்று.



# நவக்கிரக கோட்சாரபலன்

## கொம்மைப் பாட்டு

### சூரியன்

சூரியனென்று நாலைந்தேழெட்டுச் சுகமிலொன்பது பன்னிரண்டில், வீரியமாக நின்ருல் விபரீதம் விளைக்குமே நிதம் மானிடரே. 1

### சந்திரன்

சந்திரனிருநான்கா றெட்டுவியத்தில் தானேகதித்து நின்ருக்கால், மந்திரவாதி வாயடங்கினுற்போல மாறுமே பலன்கள் மானிடரே. 2

### செவ்வாய்

செவ்வாயொன்றிரண்டு நாலெட்டுப்பத்தில் யேழும் விரையத்திலிருந்தால், எவ்வாருேபிள்ளை பெண்சாதி பெற்ருர்நிலையிசையாதென்னுவு மானிடரே. 3

### புதன்

புதனேர்மூன்று நான்காறெட்டு தசம்வியத்தில் பொல்லாரோடுதானிருந்தால் இதமிலையெந் நேரமுந்துக்க மெழும்புமென்றுணர் மானிடரே. 4

### வியாழன்

குருவேயொன்றுநான் காறெட்டுமூன்றில் கூடிப்பத்துப் பன்னிரண்டிலிருந்தால், உருவேயில்லையென் ருேதினேர் முன்னேர் உற்றுக்கேள்நிசமே மானிடரே. 5

### வெள்ளி

சுக்கிரன்மூவாறே ழொன்பதாறில் தொகையாயிருந்தா லிந்த பலன், அக்கிரமுமழுகையு மவமான மாகுமென்ருரே மானிடரே.

## சனி

சனியோரிருநான் கெட்டுதசம் வியத்தில் சலிப்புடனேதா னிருந்தால், இனிபிசாசு பூதப்பேய்கருப்பன் ஏவலாம்சத்துரு மானிடரே. 7

## இராகு கேதுக்கள்

ராகுகேதுக்களொன் றிரண்டெட்டு நவமுடன் விரயத்திருந் தால், பாகுசேர்மொழியாள் பயித்தியத்தால் பாடியாடுவரே மானிடரே. 8

மற்றவிடத்திற் கிரகங்களிருந்தால் மாளாத செல்வமும் யோகம்வரும். முற்றுந்துறந்த முனிவர் சொன்னுரிதை முறை மையாய்ப்பார் மானிடரே. 9

நீசமென்றுநீ தள்ளாதே நிலையுச்சமனங் கொள்ளாதே, நீச னிருந்தவீட்டா னுச்சமானல் நிலைக்குமே யோகம் மானிடரே.

கொம்மைப்பாட்டாக மொழிந்தவனுரெனில் கோதை திரு வடிதாடொழுது, நம்மையாழுந் தேவராச கவிராயன் நாடிச் சொன்னுன் மானிடரே. 11

கோட்சாரப் பலாபலக் கொம்மைப்பாட்டு

முற்றிற்று.



# சந்திர காவியம்

எண்சீரடி விருத்தம்

அவனியிலேபிறந்திட்ட மனிதர்கட்கு
அன்புடனே நவக்கிரகமொன் பதுபேரானோர்
தவருமல்சுகதுக்கம் கொடுக்குமந்த
தன்மையெல்லாம்விபரமாய்ச் சொல்வதற்கு
சிவசக்திப்பார்வதியாள் பாலனுன
சித்திவிநாயகரருளால் சொல்லுகின்றேன்
கவனித்துக்கொண்டுசுக மாயிருப்பீர்
கவலையில்லாதெந்நாளும் ஜீவிப்பாரே. 1

உரை :—உலகில் பிறந்த மனிதர்களுக்கு நவக்கிரகங்களாகிய சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு கேதுயென்னும் ஒன்பதுபேரும் கொடுக்கும் சுகதுக்கத்திற் கிசைந்த பலாபலன் விபரத்தை சிவசத்தியான பார்வதியின் பாலனுகிய சித்தி விநாயகரின் கிருபையால் சொல்லுகின்றேன், அந்த விபரத்தை யெல்லாம் கவனித்துக்கொண்டு சுக ஜீவியாய் வாழ்ந்திருப்பீர்கள்.

## இராசி சக்கரத்தின் பலன்

பருதிமதிசேய்புதனும் குருவும்சுக்ரன்
பகருசனிராகு கேதுக்களெல்லாம்
வருகின்றபனிரண்டு ராசிதன்னை
வகுத்துணர்ந்துபலாபலனைச் சொல்வதென்றால்
குருவருளும்ஞாபகத்தின் சக்திவேண்டும்
குற்றமிலாமனதமைந்தா சனத்துட்கார்ந்து
கருணையுடன்ஜாதகத்தைக் கணித்தாராய்ந்து
கழறுவீர்பலாபலனை மனிதருக்கே. 2

உரை :—மனிதவகுப்பார்கள் பூமியில் பிறந்து, வளர்ந்து ஜீவித்திருக்கும்போது, சுகதுக்கத்தைக் கவனிப்பதென்றால், அவரவர்கள் ஜனனலக்கினத்தின்படியே குறிப்பித்திருக்கும் இராசி சக்கரமாகிய மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனமாகிய பனிரெண்டு ராசியிலும் எந்தெந்தராசியில் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது என்னும் நவக்கிரகங்கள் ஒன்பதுபேரு மிருக்கின்றார்களோ அந்தந்த பலா

பலனைப் பார்த்து பலன் சொல்ல வேண்டும். ஜாதகர் முன் ஜனனத்திற் செய்த பாப பலனுக்கிசைந்த கஷ்டபலன் நேரிடும் போது அவற்றிற்கிசைந்த சாந்தி செய்துக்கொண்டால் துன்பபலன் நீங்கி இன்ப பலனுண்டாகும்.

## ஐந்தொன்பதுக்கதிபர் பலன்

ஐந்தொன்பதாமிடத்திற் கதிபராஞேர்
அன்புடனே நற்பலன் தந் துதவுவார்கள்
சிந்தைமகிழ்ந்தேமூன்றுக் காரேனுந்தான்
சித்தமகிழ்வாய்லாபஸ் தோனுஞலும்
அந்தமுடன் நல்லபலன் மிகவேதந்து
அவரவர்கட்கிசைந்தசுக வாழ்வுதந்தும்
மைந்தர்பாக்கியந்தருவார் மென்மேலாக
மா நிலத்தில்பிரபுவென ஜீவிப்பாரே. 3

உரை :—பஞ்சமஸ்தானுதிபதியாகிய ஐந்தாமிடத் ததிபதி யானேர் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது வென்னும் நவக்கிரகங்களில் எவர்களா யிருந்தாலும் நல்ல பலனையே தருவார்கள். மூன்று, ஆறு லாபஸ் தானுதிபதியானுலும் மேற்குறிப்பித்த கிரகங்களைப்போல் அவர் கள் திசாபுத்தியில் நல்ல பலனையே தருவார்கள். அதன் விபரம் அடியிற் காண்க.

வெண்பா

அஞ்சொன்பதுக்கதிபர்பாபர் சுபரானுலும்
மிஞ்சுபலனைத்தருவார் மென்மூன்ரு—றெஞ்சுபதி
ஞென்றுக்கதிபதியு மிப்படியேயொன்றிவரிற்
போன்றசுபமே கொடுப்பார்பூண்டு. 4

உரை :—ஐந்தாமிடத்ததிபதியும், ஒன்பதாமிடத்ததிபதியும் மூன்ருமிடத்ததிபதியும், ஆருமிடத்ததிபதியும், இலாபஸ்தானுதி பதியும் அவரவர்கள் திசாபுத்தியில் நல்லபலனைத் தருவார்கள். ஆனுல், அவரவர்களிருக்கும் ஸ்தானபலனறிந்து சொல்ல வேண்டும்.

நிசகேந்திராதிபதி நீதிசுபராஞலே
அசுபபலனேகொடுப்ப ரல்லாமல்—விரைகேந்
திரபதிகள்பாவிகளாய் சேரிலதிசுபங்கள்
பரவிநற் பலன்கள்கொடுப்பார். 5

உரை :—குரு, சுக்கிரன், புதன், சந்திரனுகிய இவர்கள் நால் வரும் கேந்திராதிபத்தியம் பெற்றிருந்தால் அவர்கள் திசாபுத்தி களில் அசுபபலனுகிய கஷ்டநஷ்டத்தையே அனுபவிக்கச் செய்

உரை :—பெண்ணின் ராசியும் புருஷன் ராசியும் ஒரே ராசி யானாலும் ஒன்றுக்கொன்று மித்ருவா யிருந்தாலும், நற்பலனை யனுபவிப்பதுடன் பொன்பொருள் பூஸ்திதியும் புத்திரபாக்கிய மும் பெற்று சகலரும் புகழ்ந்துரைக்கும் குடும்ப ரக்ஷகரா யிருந்து மேன்மை யடைந்திருக்கச் செய்யும். ஒன்றுக்கொன்று பகை இராசியாயிருந்தால், சதாகாலமும் மனைவி மணாளன் ஒருவர்க் கொருவர் சத்ருத்தன்மையாக பகைத்துக்கொண்டும் சண்டை சச்சரவு செய்துக்கொண்டும் குடும்ப கலகஞ் செய்யும் வஞ்சகரின் வார்த்தையைக் கேட்டு வம்பும் வாதும் கலகமும் செய்துக்கொண் டிருப்பார்கள்

இவ்விதமாகவேதான் இசைந்தநற்பொருத்தம்பார்த்து
அவ்வியமில்லாமற்றுன் அளவுபோல்கணித்தாராய்ந்து
செவ்விழிகன்னிகைக்கும் செல்வனும்புருஷனுக்கும்
ஒவ்வியேமணஞ்செய்தாலே உத்தமமாகுந்தானே. 18

உரை :—இவ்விதமாய் ஓர் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பொருத்தம் பார்த்து இராசி லக்கினத்திதி வார நக்ஷத்ர பொருத்த மனைத்தும் சரியாய்ப் பார்த்து மணஞ்செய்வதுதான் சிரேஷ்ட மாகும். ஆகையால், இந்தப் பொருத்தங்கள் பார்த்து செய்வ துடன் அவர்கள் ஜாதகத்தையும் ஆராய்ந்து பலனுக்கிசைந்த விதமாய் மணமுகூர்த்த சுபதினத்தின்படியே மங்கிலியஞ் சூட்டி னுல் சதிபதி சுகஜீவியாய் புத்ரசம்பத்துடன் வாழ்ந்திருப்பார்கள்.

பொருத்தங்களமைந்திடாமல் பெண்ணின்ஜாதகம்பாராமல்
புருஷன்ஜாதகமும்நல்ல பொருத்தமாயமைந்திடாமல்
வருவதுவந்தேதீரும் மணஞ்செய்வோமென்றுரைத்தால்
பொருளில்லாவறுமையாலே பூதலத்தலைகுவாரே. 19

உரை :—கன்னிகைக்கும் புருஷனுக்கும் பொருத்தமும் சரியா யமைந்திடாமலும் அவர்கள் ஜாதகபலனும் சரியாயமையாமலு மிருக்கும்போது, வருவது வந்தேதீருமென்று மணஞ்செய்தால் பலவித கஷ்டநஷ்டமும் கவலையும் வறுமையும் சூழ்ந்து கவலை யால் மெலிந்து மரணமாகியும் பலவித துன்பங்களெல்லாம் அனு பவிக்கச் செய்யும்.

கன்னிகைபுருஷனுக்கும் கலியாணஞ்செய்யும்போது
என்னமோஏதோவென்று ஏற்றதோர்மணமுகூர்த்தம்
நன்னயமாகச்செய்தால் நவில்நன்மையாயிருந்தால்
அன்புடன்வாழ்ந்திருப்பார் ஆண்டவன்சகாயத்தாலே. 20

உரை:—சிலசமயம் மணப்பொருத்தம் பாராமலும் காலபலன் ஜாதகபலன் பாராமலும் மணமுகூர்த்தஞ் செய்யும்போது புருஷன் தனது மனைவிக்கு மங்கிலியம் சூட்டினால் அந்த வேளை பலனுக்கும் ஜாதகபலனுக்கும் சரியாய் ஜீவித்திருக்கும்படியாக முன் ஜனனத்தின் புண்ணிய பலனிருந்தால் அவர்கள் மங்கிலியம் சூட்டும்போது முகூர்த்தமெல்லாம் நன்மை தருவதற்கிசைந்த விதமானபடி சரியாய் அமைந்திருப்பதுடன் அவர்கள் ஜாதக பலனும் மேன்மையா யிருந்தால் மணஞ் செய்துக்கொண்ட கணவனும் மனைவியும் மனமகிழ்வாய் வாழ்ந்திருந்து புத்திரபாக்யம்பெற்று தனதான்ய சம்பத்துடனும் பந்துமித்திரர் கூட்டத்துடன் வெகுமேன்மையாக முன்ஜனனத்தின் புண்ணியத்தினால் பகவானுடைய அனுக்கிரகம்பெற்று ஆனந்தமாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

திருமணப் பொருத்த நிர்ணயம்

முற்றிற்று.



எள்ளேரி க. வ. அப்பாவு பிள்ளை இயற்றிய

# ஜெயமுனி சோதிட சூத்திரம்

## விநாயகர் துதி

அகவல்

ஆனைமுகவ னடியிணைதொழுது
மானிடர்ஜெனித்த வையகந்தன்னில்
நற்பலன்துற்பலன் நாளுமேயறிய
சொற்பொருள்தன்னால் சொல்லுதற்கியைந்து
பரிமுதலுடுக்கள் பாங்கானகாற்று
அரிமுதலெழுத்தும் அவர்ராசிநாளும்
பகையுடனட்பும் பார்வையும்சமமும்
தொகையதாமிராசி தொகுத்தவர்குணக்கும்
இடபலமுதலா மெல்லாவிபரமும்
திடமுடனெடுத்து சீர்பெறவமைத்து
கப்பிமாம்புலியூர் கருணீகர்குலத்தோன்
தப்பிலாப்பெரியணன் தனக்குப்பவுத்திரன்
அப்பாவுபிள்ளை அன்புடனிதனை
செப்பேடுதன்னில் சீர்பெறஎழுதி
அச்சிற்பதிக்க அளித்தனன்தானே.

## நக்ஷத்திர எழுத்து இராசியில் நக்ஷத்திர நிலை

| எண் | முதல் பாதம் | 2-ம் பாதம் | 3-ம் பாதம் | 4-ம் பாதம் | நட்சத்திரம் | இராசி |
|---|---|---|---|---|---|---|
| 1 | சு | சே | சோ | ல | அசுவனி | மேடம் |
| 2 | லி | லூ | லே | லோ | பரணி | மேடம் |
| 3 | ஆ | ஈ | ஊ | ஏ | கார்த்தி | 1-கால் மேடம்<br>2,3,4 கால் இடபம் |
| 4 | ஒ | வா | வீ | வு | ரோகணி | இடபம் |
| 5 | வே | வோ | கா | கி | மிருகசீரி | 1,2-கால் இடபம்<br>3,4-கால் மிதுனம் |
| 6 | கூ | க | ங | ச | திருவா | மிதுனம் |
| 7 | கே | கோ | ஹ | ஹி | புனர்பூச | 1,2,3-கால் மிதுனம்<br>4-கால் கடகம் |
| 8 | ஹூ | ஹே | ஹோ | ட | பூசம் | கடகம் |
| 9 | டி | டு | டே | டோ | ஆயிலியம் | கடகம் |
| 10 | மா | மீ | மூ | மே | மகம் | சிங்கம் |
| 11 | மொ | டா | டி | டு | பூரம் | சிங்கம் |
| 12 | டெ | டொ | பா | பி | உத்திரம் | 1-கால் சிங்கம்<br>2,3,4-கால் கன்னி |
| 13 | பூ | ஷ | நா | ட்ட | அஸ்தம் | கன்னி |
| 14 | பே | போ | ரா | .ரி | சித்திரை | 1,2-கால் கன்னி<br>3,4-கால் துலாம் |
| 15 | ரு | ரே | ரோ | த | சோதி | துலாம் |
| 16 | தீ | து | தே | தோ | விசாகம் | 1,2,3-கால் துலாம்<br>4-கால் விருச்சிகம் |
| 17 | நா | நீ | நூ | நே | அனுஷம் | விருச்சிகம் |
| 18 | நோ | யா | யி | யு | கேட்டை | விருச்சிகம் |
| 19 | யெ | யோ | பா | பி | மூலம் | தனுசு |
| 20 | பூ | தா | ப | டா | பூராடம் | தனுசு |
| 21 | பெ | போ | ஜ | ஜி | உத்ராடம் | 1-கால் தனுசு<br>2,3,4-கால் மகரம் |
| 22 | ஜு | ஜே | ஜோ | க | திருவோ | மகரம் |
| 23 | கா | கி | கு | கே | அவிட்டம் | 1,2-கால் மகரம்<br>3,4-கும்பம் |
| 24 | சொ | சா | சீ | சு | சதையம் | கும்பம் |
| 25 | செ | சோ | தா | தி | பூரட்டாதி | 1,2,3-கால் கும்பம்<br>4-கால் மீனம் |
| 26 | தூ | தை | த்தா | தி | உத்ரட் | மீனம் |
| 27 | தே | தோ | சா | சி | ரேவதி | மீனம் |

## இராசிகளில் கிரகங்களின் நட்பு

### ஆட்சி, உச்சம், பகை, நீசம்

| இராசி | சூரி | சந் | செ | புத | குரு | சுக் | சனி | இரா | கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மேடம் | உ | ப | ஆ | ந | ப | ந | நீ | ப | ப |
| இடபம் | ப | உ | ந | ந | ந | ஆ | ந | நீ | ந |
| மிதுன | ப | ந | ந | ஆ | ந | ந | ந | ஆ | ந |
| கடகம் | ப | ஆ | நீ | ந | உ | ப | ப | ப | ப |
| சிங்கம் | ஆ | ப | ப | ப | ந | ப | ப | ப | நீ |
| கன்னி | ப | ந | ந | ஆஉ | ந | நீ | ந | ந | ஆ |
| துலாம் | நீ | ப | ந | ந | ந | ஆ | உ | ந | ந |
| விருச் | ப | நீ | ஆ | ப | ப | ந | ப | உ | ஆ |
| தனுசு | ந | ந | ப | ந | ஆ | ந | ந | ந | ஆ |
| மகரம் | ப | ப | உ | ந | நீ | ந | ஆ | ந | ஆ |
| கும்பம் | ப | ப | ப | ந | ந | ந | ஆ | ந | உ |
| மீனம் | ந | ந | ப | நீ | ஆ | உ | ந | ந | ஆ |

### கிரகங்களின் நட்பு பகை சமம்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூரி | ச | ந | ந | ந | ந | ப | ப | ப | ப |
| சந் | ந | ச | ச | ந | ச | ச | ச | ப | ப |
| செவ் | ச | ந | ச | ப | ந | ச | ந | ப | ப |
| புதன் | ந | ப | ச | ச | ச | ந | ச | ப | ப |
| குரு | ந | ந | ந | ப | ச | ப | ச | ப | ப |
| சுக்கிர | ச | ப | ச | ந | ச | ச | ந | ப | ப |
| சனி | ப | ப | ச | ச | ந | ந | ச | ப | ப |
| இராகு | ப | ப | ப | ப | ப | ப | ப | ப | ப |
| கேது | ப | ப | ப | ப | ப | ப | ப | ப | ப |

ந — நட்பு, ப - பகை, ச — சமம்.

## இராசியில் கிரகாட்சி, உச்சம், பகை, நீசம்

காப்பு

கயமுகனடியிணை கரத்தினுற்றெழுது
செயமுனிவாக்கியம் செப்பிடலாமே.

அறுசீர்க்கழி நெடில்

சூரிய னுட்சி சிங்கஞ் சோர்விலா மேட முச்சம்
வீரிய துலாமே நீசம் மீன்தனு நட்ப தாகும்
ஏரிய மற்ற ராசி யினமிலாப் பகைய தென்று
பாரினில் பகர்ந்து நீயும் பலனதைப் பகரு வாயே. 1

சந்திரன் கடக மாட்சி தார்விடை யுச்ச மாகும்
சிந்திய தேளே நீசஞ் சிலைகன்னி மிதுன மீனம்
வந்திடு நட்ப தாகும் மற்றவை பகையதாகும்
இந்திர னுதலாய் கேளே யிவை யெலாம் நிசாகர்க்கே. 2

எண்சீர்க்கழி நெடில்

செவ்வாய்க்கு மேடந்தே ளாட்சியாகுஞ்
சீரியதோர் மகரமுச்சங் கடகநீசம்
வெவ்வியதோர் விடைமிதுனங் கன்னியோடு
வேண்டுதுலா ராசியிவை நட்பதாகுங்
கவ்வியிடு சிங்கமுடன் கும்பந்தானுங்
கனமான தனுசுடனே மீனங்கூட
சவ்வியதோர் பகையதென்று கணிதமேலோர்
தப்பாமல் சாற்றுவாரென் றறைவாய்நீயே. 3

புதனுக்கு மிதுனகன்னி யாட்சியாகும்
பூவையுச்சம் நீசமது மீனமாகும்
பதமுடைய விடையாடு தனுமகரகும்பம்
பார்தனிலே துலைகடக நட்பதாகும்
விதனமுடன் சிங்கந்தேள் பகையதாகும்
மேதையுட சங்கதையின் விபரஞ்சொன்னேன்
சிதையாம லிப்படியே புவியில்பார்த்து
சிறப்புடனே மானிடர்தஞ் சிறப்புசொல்லே. 4

குருவுக்கு விடைமிதுனஞ் சிங்கம்கன்னி
கும்பமுடன் துலாமதுவு நட்பதாகும்
பருகுமது கடகமுச்சம் மகரநீசம்
பூாவையேதனுமீன மாட்சியாகும்

திருகுதரு தேளாடு பகையதாகும்
செகந்தனிலே யிவ்வகையைச் செப்பலாகும்
அருமைதரும் குருவினுட வியற்கைதன்னை
அவனிதனி லிதையறிந்து அறைவாய்நீயே. 5

அறுசீர்க்கழி நெடில்

பார்க்கவன் விடையுங் கோலும் பார்தனி லாட்சி யாகும்
ஏர்க்கவே மீன முச்சம் ஏந்திழை நீச மாகும்
மூர்க்கமா மகரங் கும்ப முந்தியே ஆடுந் தேளும்
பார்தனு மிதுன நட்பு பகையரி கடகந் தானே. 6

சனியது மகர கும்பந் தானுமே யாட்சி யாகும்
வனியனுந் துலாமு முச்சந் தகரது நீசமாகும்
குனிசிலை மீன வேறு கொடியிடை மிதுன நட்பாம்
வனிதையே கடகஞ் சிங்கம் வன்தேளு பகைய தாமே. 7

பாம்பது கன்னி செட்டி பார்தனு மகர கும்பம்
கோம்பிலா மீனம் நட்பு சோர்விலா மிதுன மாட்சி
தேம்பிடுந் தேளு முச்சம் சிவன் விடை நீசமாகும்
பாம்பது கடகஞ் சிங்கம் பகையதா மேடந் தானே. 8

கேதுயாழ் விடையுங்கூட கெட்டியாஞ் செட்டி நட்பாம்
வாதைசெய் தேளு மீனம் மகர்தனு கன்னி ஆட்சி
கோதையே கும்ப முச்சம் கூறிய சிங்க நீசம்
பாதகக் கடக மேடம் பகையெனப் பகர லாமே. 9

## இராசிகளில் கிரகம் நிற்குங்காலம்

குறித்தகதி ரோன்புகர் புந்தி குலாவி நிற்ப தொருமாதம்
செறுத்தமதி நாளிரண்டேகால் செவ்வாய்மாதமொன் றரையாம்
கறுத்தசனிரெண்டரையாண்டு கனகனோராண்டரவிரண்டும்
நிறுத்தவாண்டொன்றரையாக விராசியொன்றில்நின் றிடுமே.

## கிரக பார்வை

காரியுமூன் றேழ்பத்து கனகனஞ் சேழொன்பானும்
பாரினில் செவ்வாய்நாலே ழெட்டெனப் பகரலாகும்
சூரியன் மதியும்புந்தி சுக்கிர னிராகுகேது
ஏரியவேழிற் பார்வை யெனவிதித் தனர்மே லோரே. 11

## கோசார பலன்

### எண்சீர்க்கழி நெடில்

இராசியதி பனுச்சம்வரி லறிவுதோன்று மிகக்களிப்புந்
தேசுமிலகுந் திரவியமுஞ் சேருஞ்சுகியாய்த் தானிருப்பன்
நேசம்புவியில் ஜெயங்கொள்வ னிணைத்தகருமங் கைகூடும்
பேசுமிவரைத் தீக்கோட்கள் பிடித்துநோக்கிற் பிழையாமே. 1

ஆமோராசி பதிநீச மமரிற்றுயர மடைந்துவரும்
போமேயலது திரவியமும் பொருந்தா னிலைமை வேறுபடும்
தாமேயிவரோடுடன் தீக்கோள் தானுங்கூடில்பார்த்திடிலே
சாமேயலது தரித்திரனுய் சமைந்துநோயில் தான்படுமே. 2

படுமேராசி சொக்ஷேத்தி ரத்திலிருக்கில் பயந்தீரும்
விடுமேநோயுஞ் சுகமுண்டு விளங்குங்கீர்த்தி மிகவுண்டாம்
கொடுமேதினியு மளவில்வருங் குறித்தகருமங் கைகூடும்
அடுமேபாவக் கோன்பத்தில் அணுகில்நோக்கி லணுகாதே. 3

ஆதேராசி யதிமித்துரு ஆனவீட்டி லமர்ந்திருக்கில்
மாதேகலியா ணங்கள்வரும் மனதுபீடை யகன்றுவிடும்
மீதேதரியா ருறவாவார் விளங்குமரசர் மகிழ்ந்திடுவார்
ஏதேதீக்கோ ளுடன்கூடில் எதிர்த்துநோக்கி லழிந்திடுமே. 4

அழியாவிராசி பதிசத்துரு வானவீட்டி லமைந்திருக்கில்
ஒழியாதுக்க நோய்விளையு மோங்குமுறவும் பகையாவர்
செழியாதேசந் திரிந்திடுவார் செறியுநிதியுஞ் செலவாகும்
பழியாம்பாவக் கோள்நோக்கில் படியில்மரணம் பலித்திடுமே. 5

பலிக்குமிராசி பதிசுபரோ டோங்கியிருக்கில் பதிபேரும்
கெலிக்கும்படையுந் திரவியமுங் கிடைக்குஞ் சினேகம் புத்திரரும்
சலிப்புநீங்கு மடந்தையர்கள் தனதுபோக மிகுத்துவரும்
வலிக்குந்தீக்கோள் பார்த்திடிலே சொன்னபலன்கள்வாராதே. 6

வாராமிராசி யாதிபதி வந்துபாவ ருடன்கூடில்
தீராநோயுந் தரித்திரமும் சேருநிதியும் பறிபோகும்
பேராநெஞ்சுங் கலங்கிவிடும் பிரியாத் திரிவும் பிரிந்துவிடும்
சேராத்துணைவர்பயஞ்செனிக்கும் செய்யுங்கருமஞ்சிதைந்திடுமே.

சிதையாவிராசி யாதிபதி சீரில்சத்துருவுடன் கூடில்
மதியா திருக்கில் மணப்பீடை மனதில் துக்கம் வருமலது
பதிபோமொன்னர் பயஞ்செனிக்கும் பழியாங்கலக்கம் மிகவுண்
நிதியும்பயிரும் பலியாது நேரும்நிந்தை நெடியதாமே. [டாம்

நெடிதா மிராசியாதிபதி நீங்காதஸ்த மனமாகில்
மடிவார் மனது பிரமிக்கும் மருவுநிதியும் கெடுமுடனே
கொடியே யிடையாள் சுகமில்லை கொடுமைவந்து விளைந்துவிடும்
படிமேலெங்கும் திரிந்திடுவர் பழியா மரசர் பகையாமே. 9

பகையா மிராசியாதிபதி படியிலுதிக்கிற் பலகீர்த்தி, மிகவாங் கனகரத்தினமு மேன்மேல் வசமாம் வினை நீங்கும், சுகமாந் தேகம் வாகனமுந் தோற்று மொன்னுர் தமைசெயிப்பார், செகமேல் விளங்குந் தொழிலுண்டாம் சிறையும் நீங்கும் செருக்காமே. 10

செருக்கு மிராசியாதிபதி சீறுமிராகு கேதுவுந்தான்
இருக்கும் வழியில் நடந்திடுமேல் இடரும்வினையும் வாளதினல்
பெருக்கும்விரணங் கடநோய்கள் பேராந்திருவும் பொருட்சேதம்
உருக்குமனதில் வரும்பீடை யொன்றுரலைவர் உறுதியிதே. 11

உறுதிராசி யாதிபதி மொன்றேடைந்தி லொன்பதினில்
அறுதியாக வமைந்துநிற்கில் அதிக நிதிகள்வருமுடனே
பிறிதியான தொழிலனுதும் பிறங்குசுபக்கோள் நோக்கநலம்
இறுதிகொடுக்குந் தீக்கோள்கள் இருந்துநோக்கி லிணங்காதே. ()

இணங்குராசி ஒன்பதஞ்சில் ஏற்குஞ் சுபக்கோ ளிருந்திடுமேல்
கணங்கள் நீதியும் வருந்தொழில்கள் கருமமனைத்தும் கைவசமாம்
அணங்குபோக சவுக்கியங்கள் ஆதும் அரச ருறவாவார் [தே.
சுணங்கும் பாவக்கோள் நோக்கில்சொன்ன பலன்கள் தோன்று

தோன்றும் ராசியொன்பதஞ்சில் துடர்ந்து பாவக்கோளிருக்கில்
ஊன்றும் சுரமும் பலபிணியும் ஓங்குந் திரவியந் தான்கெடுமே
யீன்றகுழவி யுயிர்ச்சேதம் இயல்பாஞ் சிறிதும் பலியாது
தோன்றுமனது சஞ்சலமாம் தோலாப்படையுந் தோன்றிடுமே. 14

தோற்று மிராசியாதிபனை சுபமாம் வியாழம் பார்த்திடிலே
ஏற்றதொழிலுந் திரவியமும் இருந்தவிடத்தி லெய்திவிடும்
ஆற்றபுகரும் புதன்சசியும் அடர்ந்து பார்க்கி லதுசெயமாம்
கூற்றங் கதிர்சேய் பாம்புசனி பார்க்கில் பலன்கள் கூடாதே. 15

கூடுமிராசிக் கிருபுறமுங் கூறுமதிபர்க் கிருபுறமும்
நீடுஞ் சுபக்கோள்கள் நின்றிடிலே நிதியுஞ் சேரும் சுகமுண்டு
மூடும்பாவக் கோளிருக்கில் முயலுங் கருமங்கூடாது
தேடும் பொருள்க ளழிவாகும் தேகமதுக்குக் கண்டமதே. 16

கண்டராசி யாதிபதி கதிர்கள் நீங்கி வக்கிரிக்கில்
கொண்ட பொருள்க ளழிவாகும் குடிவிட் டோட்டும் கலகமுறும்
அண்டும் பிணிகள் தீராது அதிகமாகுந் தொழில்மறுக்கும்
விண்ட பலன்கள் வக்கிரந்தீர்ந் துடனேவந்து விளைந்திடுமே. 17

விளையுமிராசி யாதிபதி விரைந்தே நிற்குமிராசியினுக்
குலையுந்திரிகோ ணந்தனக்கே யுற்றசுபக்கோள் தானிருக்கில்
வளையுஞ் சுபமும் தானுண்டாம் வருந்தும் பாவக்கோளிருக்கில்
கிளையும் பகையாம் பலனில்லை கெலிப்பும் நீங்குமறிவீரே. 18

அறியு மிராசியாதிபதி ஆறீருரே டெட்டதனில்
நிறுவியிருக்கி லவபலனும் நிதியுமிழக்கும் நிலைநீங்கும்
உறுதிசுபக்கோள் கூடிடினே உண்ணும் பலன்கள் கைவசமாம்
முறுதி பாபக்கோள் கூடில்முழுது மரணங் கிட்டிடுமே. 19

கிட்டுமிராசி யதிபன்முதல் கிளருஞ் சுபக்கோள் திரிகோணம்
திட்டராசி யுடனிருக்கில் சேரும்பலமென் றுரைத்ததுமெய்
உட்டமுன்றின் வீட்டோர்கள் இருக்குந்தானம் பலத்திருக்கில்
தொட்டபலன்சம்பூரணமாய் தோணக்கிடைக்குந்தொலையாதே.

தொலையா தொருவன் தான்பிறந்த தோன்றும் நாள்கள் மூன்றிலுந்தான், நிலையாஞ்சுபக்கோள் நின்றிருக்கில் நிதியுஞ்சேரும் நிறைதீக்கோள், உலையாதிருக்கப் பொருளழிவாம் உடம்பு பீடையுறுங் கலகம், மலைவாம்பதிவிட் டேகிவிடும் மறமாம்பலன்கண் டறிந்துரையே. 21

உரையாம் பிறக்கும்நாளினுக்கே ஓங்குங்கிரக மொன்பதுந்தான்
நிரையாமவத்தை வேதையுறில் நிதியுமிழக்கும் நிலைநீங்கும்
விரையாம் பலன்கள் வாராது விதனம்பிணிநோய் மனஸ்தாபம்
புரைசே ரரசர்பய மிகுதிபோரில் மரணம் புகழ்வீரே 22

புகலுமிராசிக் கிரண்டைந்தில் பொருந்துஞ் சுபக்கோள் நின்றிருக்கில், இகலுமரசர் முகவசியம் எவர்க்கும் பிரியமா யிருப்பர், அகலுமூன்றி ரைந்திடத்தில் ஆகாக்கிரக மமைந்து நிற்கில், இகலும்பொருந்தா ரோடிருந்தால் இளைப்போர் செயிப்பர் நிச்சயமே. 23

சயமாமிராசிக் கைந்தினிலே சாரும் பாவக்கோளிருக்கில்
நயமாந் தாரம்தினக்கதிகம் நாடும் பிணியாம் நான்கதனில்
சுயமாஞ் சுபக்கோள் நின்றிடிலே சுகமாந் தேகம் பத்தினிலே
வயமாம் பாவக்கிரகமுறில் வறுமை கீர்த்தி வரண்டிடுமே. 24

இடுமா மிராசிக்கொன்பதனில் இசையாய் பாபக்கோளுதிக்கில், அடுமேதனதின் பிதுர்பீடை அணுகுநாலா மிடந்தனிலே, விடுமே பாவரிருந்திட்டால் வீடுவிட் டோட்டும் பதினொன்றில், நெடிதாஞ் சுபக்கோள் நின்றிட்டால் நிதியும் சேருமிதுநிசமே. ()

நிசமா மிராசிக்கெட்டினிலே நெடியபாவ ரிருந்திடிலே
வசமாந் தேகபீடைகள்தான் வருமேஒன்ப தாமிடத்தில்
விசையாய் சுபக்கோள் வீற்றிருக்கிற் வினைவுந் தரும தானகுரு
நசையாய் தெய்வபக்தியுடன் நன்றாய் வருமே நங்கையரே. 26

நங்கைராசி கேந்திரத்தில் நற்கோள் நிற்கில் லாபமுறும்
சங்கையுடைய மருவலரை சாடித்துரத்தி வென்றிடுவன்
மங்கைசுகமு மாடுமணி மைந்தரின்பம் பெற்றிடுவார்
தங்கும்பாவர் சுபருமுறில் தருமே யசுப சுபபலனே. 27

பலமா மிராசியாதிபதி புரிவாஞ் சொக்ஷேத் திரமுச்சம்
குலமாங் கோள்கள் தன்னுடனே கூடியிருக்கத் திருவுண்டாம்
நலமாந் தேகநிதியுண்டாம் நடுக்கந்தீரும் அறிவுதரும்
தலமாந்தொழிலு மிகவுண்டாம் சாரும்பிணியுந் தவிர்ந்திடுமே. ()

தவமா மிராசியாதிபதி தானே நவாங்கி சத்திருக்கில்
உவமாஞ் சொக்ஷேத்திரமுச்சம் ஓங்குங் குசனங்கி சத்தினிலே
நிவமாமிருக்க சுபபலனும் நீசமருவி சத்துருக்கள்
பவமாமென்னு மங்கிசத்தில் பாரில் பலனும் அவம்உரையே. 29

உரையாமுள்ள சரராசியோர்கள் திரராசியைப் பார்ப்பர்
நிரையாந்திர ராசியிலுள்ளோர் நீங்கா சரராசியைப் பார்ப்பர்
விரைவா முபயராசியது மேன்மேலுபய ராசியினை
புரையாஞ் சுற்றிப் பார்த்திடுவர் புகலக்கேளு மிதுதனையே. 30

இதுதானேக்கிற் சரராசி யிருப்பிரண்டா மிராசிதனை
அதுதானேக்கார் திரராசி யமர்ந்தோர் பன்னிரெண் டாகும்
விதமா மிராசியினை நோக்கார் விளங்குமுபய ராசியுள்ளோர்
கதுவா நான்காமிராசிதனை கண்ணால் நோக்கார் காணுமதே. 31

காணுமிது நோக்கல்லாமல் காரிமூன்று பத்துகுஜன், தோணு நான் காமெட்டு பொன்னேன் துடர்ந்து நோக்குமொன்பதஞ்சு, பூணும் புகர்மால் சசிபாம்பு பொருந்தி நோக்குமே மிடங்கள், வேணுமித னேக்குடன் கலந்தே விரைந்தே பலன்கள் விளம்புவரே. 32

விளம்பு மிராசியாதிபதி வினைவாய்ப் பார்த்து விரைவாக
வளங்கொள்பலன்கள் சொலுமதுபோல் வடிவாமங்கி சாதிபர்க்கு
துளங்கும்பலமுந் தொகுத்திடுவாய் சுருதிநூலு மிவ்வாறே
களங்கமறவே சொல்வதுநீ கண்டே யறியுங் காரிகையே. 33

காரிஜென்மத் துறையுமதில் கலந்தே சனியுந்தா னிருக்க
நேரிநான்காம் நாளதனில் நெடிய ராகுகேது குஜன்
சீரியிருக்க ஒன்பதெட்டா நாளிலிரவி சிறந்திருக்கில்
பாரவிலங்கு மடிபிடியும் உடனே வந்து பலித்திடுமே. 34

பலிக்குஞ் ஜென்மத்தியாயமதில் பதிவாய் வியாழம்பதிந்திருக்கில், பொலிக்கும் நான்காம் நாளதனில் புகரும் புதனும் புகழ்ந்திருக்க, சலிக்கும் நாள்க ளொன்பதெட்டில் சசியு மிருக்க மருவலரை கெலிக்கும் சுபயோகங்கள்நிதி கிடைக்கு மரசர் வணங்கிடுவே. 35

வணங்கும் பலன்கள் வகுத்துரைக்கில் வளங்கொள் ராசி யாற்பதினென், றிணங்கு மலமும் நான்மூன்றி விருக்கும் கிரக வலிமைகளும், கணங்கொள் கிரக நோக்குகளும் கடிதா மவஸ்தை வேதைகளும், மணங்குமிராசி யிருபுறங்கொள் வலியும் பார்த்து வகுத்துரையே. 36

## துவாதச பலன்

செப்பியதோர் லக்னுதி பலவானுகில்
சேர்ந்தசுப ருடன்கூடி ஆட்சியுச்சம்
தப்பில்லாக் கருமாதி பாக்கியாதி
தான்கூடி யிருந்திடவே தாழ்வில்லாமல்
செப்பினேம் மூலமடவாய் தனமும்தானியம்
திறமான அறங்கீர்த்தி யுடையோனுவான்
அப்படியே பூரணமாய் வயதுமாகும்
அறிந்தபடி யின்னங்கே ளறிவாய்மானே. 37

மானேகேள் லக்கினுதி நீசனுகில்
மன்னுமுடல் சவுக்கியமே யில்லானுகும்
தானுகும் சரராசி கடகமேடம்
தான்மகரம் துலாமோடு தவர்ந்துமற்ற
தானுகும் ராசிதனி லிருந்திட்டாலும்
தாயகமாஞ் சடமில்லை சுகமுமில்லை
தேனுரும் சுபருடனும் பத்தாமாதி
சேர்நோக்கம் பிரகாச தேகங்காணே. 38

காணவே சென்மாதி யங்கிசத்திலேறில்
கருதுசுக தேகியாந் தனமுடையனுவன்
நீணவே நினைத்தகாரிய முடிப்பன்சபையில்
நிர்வாகி யிதமறிந்து நேராய்ச்சொல்வன்
பாணவே பூமிகள் விஸ்தாரமாகும்
பார்த்திடவே பிரசித்த கீர்த்திமானும்
வாணவே நல்லசுப ருடனேகூடில்
வாழ்ந்தமற்றோ ருடன்கூடி வலஞ்சேர்வானே. 39

சேர்ந்துநின்ற குடும்பாதி பலவானுகில்
சேருமதி தனவானும் கேந்திரபுரியமுகன்
வாய்ந்ததோர் குடும்பமுண்டாம் பாவரோடு
மருவியே சேர்ந்துநின்றுல் மற்றுங்கேளாய்
ஆய்ந்தவித்தை பொருள்செலவு குடும்பநாசம்
அகன்றுவிடு மத்திய வயதுமாகும்
ஏந்துமுலை மடமாதே பலனைப்பார்த்து
இயம்புவா யிப்படியே மொழிவாய் பின்னும். 40

நின்றமூன்று மிடத்திறைவன் பலவானுகில்
நேர்பெரிய சகோதரங்கள் வசியமுண்டாம்
வென்றிடாச் சகோதரங்கள் மிகவுண்டாகும்
விப்பிரர்நீச மூடமதில் மேவிநின்ருல்
வன்றணிதோள் மடமானே சகோதரானம்
மருவியே சுபர்பார்க்க மற்றுங்கேளாய்
பொன்றணியாய் சத்துருவா யிருப்பரெல்லாம்
பூவைநீ யிதையறிந்து போற்றுவாயே. 41

நாலிடத்ததிபன் நன்மையாய் பலமாய்
நயந்துற பந்துக்க ளுண்டாம்
காலிடக் காமி யாயிருப்பவனும்
கன்னிகை தன்னை நேசிப்பன்
மாலியா மிகுதி விகிதமாயிருப்பன்
மருவுநல் களத்திரம் வருமால்
ஆலியாம் அம்மான் வமிசம்பேர் சொல்வன்
அன்பர் தற்சுப ருடன்கூடில். 42

கூடியே நாலா மாதிதானிருக்கில்
குலவிய வாகன மிகவாம்
ஊடியாந் தோளிவாகன முண்டாம்
உண்மையாய் மனைகளு முண்டாம்
வாடியே பாவி யாகியேபலனு மற்றுமே
பாவரைக் கூடில்
சாடியே யிவைகள் தானுமேயில்லை
சகத்தினில் தெளிந்திடச் சாற்றே. 43

அஞ்சிடத் ததிபன் பலவந்தனுகில்
அருந்தநற் புதல்வரைப் பெறுவன்
நெஞ்சினில் மனநிட் களங்கமாய் வாழ்வன்
நேமியோர்புகழ் புத்தி நெறிமான்
வஞ்சமில் ஞானி தர்க்கமே செய்வன்
வன்பாவர் நீசரைக் கூடில்
பஞ்சுமெல் லடியார் நீசமா மூட புத்தி
யாமெனப் பகர்ந்திடுமே. 44

ஆறிடந் தன்னில் லக்கினத் ததிபன்
அமர்ந்திட ரோகவான் கோபி
வேறிய சூன்ய மந்திரந்தேவி பூஜையா
மிவையெலாம் வெறுப்பாம்

வேறிடந் தன்னில் பாரைச்சேரில் மணிபிணி
சத்துரு விலையாய்
மாறிடப் பலமு மிலாமலே யிருக்கில்
மருவிய யீன வானுமே. 45

ஏழிடத் ததிபன் பலவானேயாகில்
ஏர்சுத களத்திரப் பிரியன்
வாழிய க்ஷணத்து க்ஷணத்து மேகாமி
வகையொடில் வாழ்க்கையிற் சதிரான்
ஆழியாஞ் சொற்ப பலங்களாயிருக்க
அம்புவி தனிற் சதாகாமி
பாழிவன் றேன்று மேழிடத்ததிபன்
பவங்களைப் பார்த்துநீ பகரே. 46

எட்டிடத் ததிபன் லக்கினத்தாதி யிருவருங்
கூடியே யிருந்தால்
பட்டண வயதும் அற்பமதாகும்
பதியோக தீர்க்க மென்பாரால்
தட்டவே பலனில்லா திருந்தாலும்
சன்மாதி சார்ந்திருந் தாலும்
வட்டமா முலையாய் நீசொல்லக் கேளாய்
வருசாதகன் வருத்தந் தானே. 47

வருத்தமில்லா பாக்கியாதி பலவானுகி
வந்துநிற்க பிதுர்தனமே யுள்ளானுகும்
அருத்தியுறும் பிதுர்மூல சுகமேயுண்டு
அன்னியரால் பாக்கியங்க ளன்பாய்ச்சேரும்
செருத்தமிலாப் பிரகாச தேகங்கண்டாய்
செப்பியதோர் பிதுர்மூல சுகமேயுண்டு
உருத்தியிடும் பலவீன மானுலில்லை
உண்மையா யிதையறிந்து யுரைப்பாய்மானே. 48

பத்திடத் ததிபன் பலவானேயாகில் பரிந்துநற்
கர்மமே செய்வன்
மெத்தவே பாவி யாகவேயிருந்தால் வேணதுற்
கர்மமே செய்து
சத்தியாய் சுகசீவ னுயிருப்பன் சகலநற்
கருமமும் செய்வன்
மத்தமாய் வருத்த மாகவேவாழ்ந்து
மறலியூர் தனிலடை வார்கள். 49

அடைவுடன் லாபத் தாதியேபலமாய் அடைந்திடச்
சகோதர மூலம்
இடைமுடை லாபம் பயிர்வழிவேழம் இத்ததை
யுடையவ னுவான்
சடைமுடி பலமு மீனமேயாகில் சாற்றிய
சகோதர மூலம்
படைநெடுங் கண்ணு யிலேசுபலாபம் பகுத்திட
மொழிந்திடு மானே. 50

மானே பன்னிரண் டிடத்ததிபன் மணிபல
வானுமே யாகில்
தானமாந் தர்ம மிகவுமேசெய்வன் தர்மவான்
கீர்த்திமா னுவன்
ஆனதோர் விறையத்தாதி துர்பலனுய் அமைந்திட
லுத்தனுய் வாழ்வன்
தேனேர் மொழியாய் துவாதசபலனேச்
செப்பினர் ஜெயமுனிதானே. 51

## திசாபுத்தி பலன்

தேவமண் டலத்தி லிருந்திடுங் கோட்கள்
திசைபுத்தி அந்தரம் நடக்கில்
தேவதாபத்தி வாகனஞ் சுபங்கள்
திரவியமி ராசாபிமானம்
மேவலர் சமானம் பூமியாளடிமை விரும்பிய
பலனெலாங் கூடும்
தாவிய விவாக புத்திரர்லாபம் தைரியம்
வெகுபலன் சாற்றே. 52

நரமண்டலத்தி லிருந்திடுங் கோட்கள் நடந்திடுந்
திசைபுத்தி யந்தரம்
பரவியபலன்கள் தடாகம் பிரதிஷ்டைபாக்கியம்
வாகனம் பலிக்கும்
திரவியலாபம் பயிர்பரிசெட்டுசெகத்தினில்
நன்மனே கிடைத்தல்
குறைவிலாப்பூமிதாய் தந்தைமைந்தர் குளிர்ச்சியா
மிவையெலாங் கூடும். 53

அரக்கர்மண்டலத்தி லிருந்திடுங்கிரகம் அந்தரம்
திசைபுத்தி வருமால்
பெருக்கவேபுத்ரர் பெண்ணுடன்சேதம் பசாசினல்
பயித்திய ரோகம்

வருக்கமாம்பித்தர் தாய்தந்தைநஷ்டம்மனதினில்
பயந்துயர் காட்டும்
இரக்கவேகஷ்டம் பாற்பசுசேத மிவையெலாஞ்
ஜெயமுனி யிசைப்பே. 54

---

## நவக்கிரக சமயம் 48-க்கும் பலன்

ஆடுமுதற் சன்மலக்னமட்டு மெண்ணிக்கொண்டு
அவரவர்க ளிருந்தபதி யீருகச்சரியாய்
பீடுறதேயெண்ணியிரு தொகையுமொன்ருய் பேணி
பெருக்கியதோர் தொகையையிரு பானேழிற்கீந்த
சேடமதை கிரகதிசை வருடமதிற்பெருக்கு
சேயிழையே யாறெட்டுக் கீந்தமிச்சமதுதான்
நீடுலகில்சமயபல னிதுவா மென்றே
நிகழ்த்தினுற் ஜெயமுனிவர் நிச்சயமாய்த் தானே.

### 1-வது சமயம்

சொல்வர்முதற் சமயமது நிர்த்தனமேயாகும்
தொல்புவியிற் பாவமதற் கஞ்சுவன்சற்குணவான்
நல்லபொருள் சேர்த்தெவர்க்கும் வள்ளலெனக்கொடுப்பான்
நயந்தநூ லுணர்ந்துவித்வத் தன்மைமிகநவில்வன்
பல்வளஞ்சேர் நிலமும்வெகு மாளிகையுஞ்சேர்ப்பன்
பலபெண்டிர் மித்ரரோடு பாருலகில்நெடுநாள்
அல்லலின்றி வாழ்ந்திடுவன் கன்னலைமுக்கனியை
யமுதினையொத் திடுமொழிசேர் அன்னநடையாளே.

### 2-வது சமயம்

ஆறுமது வேள்நங்கை சமயமிரண்டுக்கே
யறையவர்புரோச் சிதமெனவேயருளுணர்ந்தபெரி
வாளசைக்கு மரசர்களால் தண்டனைக்குட்பட்டு [யோர்
மணவிமைந்த னவனரசு மானமுங்கெடாகும்
கோளர்களால் பகைநேரும் கள்வனெனப்படுவன்
குன்றுமெய்ச்சொல்லி லான்கூர்வன் மிகுபொய்கை
வேனைபுசிப்புணவு தவர்ந்தலைவன் வெகுகோபி
விதியிவர்க்கு விதித்தனவாய் விளம்புவர்நன்னூலே.

## 3-வது சமயம்

விடுத்திடுமூன்ரும் சமயத்தான மெனப்பகர்வர்
மிகமனதிற் கடுமையுளான் விடமெனவேமுனிவன்
கதித்திடுமா சாரமுளன் திரவியமுமற்பம்
கைப்பொருளாற் சித்திபுண்யம் கருதுமிக்ககாலான்
துதிபெறும் திசாபுத்தி வருநாள்மத்தியிலே
துன்பமடைவான் தனதான்யம் துலங்குமவனிடத்து
பதியிலவ னேசர்களும் துணைவர்களும் விசனப்பட
மணவிபுதல்வர் கண்டம் பருவர்பைந்தொடியே.

## 4-வது சமயம்

பைந்தொடிகேளீ ரிரண்டாஞ்சமயபலன் புகல்வேன்
பகரருக்கிய பாத்திரத்தில் போசனமேயாகும்
சுந்தரஞ்சேர் சுரர்களையே தரிசிப்பரவரால்
சுகமடைவன் நவமணியோ டுமிகநிதிதானியமும்
புந்திகளித்திடுநிலமும் பயிர்பலனும் பெறுவன்
புகழ்பெறநற் செல்வனெனப் போகமடைந்திடுவன்
சந்ததமு மறுசுவையோ டருந்துதலுந்தவருன்
தருக்கிளமைதனமளித்து தருமனெனப் புகழ்வார்.

## 5-வது சமயம்

நலமிலைந்தாம் சமயமுரை தரித்திரநோயாகும்
நலிவுடல் சேர்ந்திடுமனைவி மைந்தர்மித்ருபீடை
நிலையுளதன் பிதுர்க்குமூலம் அன்னைகுலங்குறைவாம்
நீணிலத்தோர் பித்தனென நிகத்துவர்களவனை
அலைவர்ன சுத்தமிலான் புத்தியனுசாரன்
அறிவிலனென்றெவர் களுமேயவனை யிகழ்ந்திடுவர்
கலைபுகழுமான்மகள்சேர் காங்கேயன் கைதொடுமொன்
கதிர்வேலுக் கிணையெனசொல் களியளிகண்ணளே.

## 6-வது சமயம்

கண்களிக்கும் சமயமிருமூன் றினுக்கே புகல்வர்
காலித்த பூணூலின் கலியாணமாகும்
மண்ணுலகிற் றனதானிய பணியினமுஞ்சேர்ப்பன்
வாகனமு மாவினமு மாவணியிவிடுவன்
எண்ணமுளான் சுகபொசிப்போன் குடும்பமதிற்றலைவன்
ஏய்ந்தசுற்றத் தொடுவாழ்வான் இயல்பானகுணவான்
புண்யபலந்திகளிற் போயாடுவன் மன்னவரைப்
புகழ்... சேர்ந்துகனம் பரிவனற்பொற்கொடியே.

## 7-வது சமயம்

பொற்கொடியே யேழாஞ்சமயமா சனத்தின்மீது
பொருந்தும்வெகு பழிபேசும் பொறுமையிலான்கோபி
நற்பலன்சேர் வித்தைபுத்தி தொழில்களுந் தம்பனமாம்
நானிலத்தி லற்பபலன் செலவதிகநணுகும்
செப்புவர்கள் திசையாதி யந்தமதில் நஷ்டம்
செய்தொழிலின் பலன்பயிரிற் சிறந்திடுமத்தியிலே
தர்க்கமிகு முத்தியோகத் தருடன் தன்னால்
தனவிரயம் மனதின்மிகச் சஞ்சலஞ்சேர்கடனே.

## 8-வது சமயம்

கடல்நிகர்த்த கண்ணுகேள் நாலிரண்டாஞ்சமயம்
கழுத்தினிலுத்திராட்ச மதியணியு மிதைக்கழற
நடமடவளிருநான்கி லிலக்குமியு மனையில்
நானிலத்திலுயிர்க்குதவு நற்குடும்பத் தலைவன்
திடமொடறுசுவையருந்தும் தனதானயம் வெகுவாய்
சேர்ந்திடுவன் சுருதிமொழிந் தினிய தலஞ்சூழ்வன்
இடும்பையிலான் குருசுக்ரர்கள் பூசுரர்கள் மகிழும்
இன்பவான் வானத்தோ டிருநிலத்திலாசான்.

## 9-வது சமயம்

உளமகிழொன்பான்சமயம் புலித்தோலிற்சயனம்
ஒண்பூமிசுரபி எருதுச்சுப வாகனமாம்
களங்கமிலாக் குலம்விளங்க யாகாதிகருமம்
கவித்துவஞ்செய் விவேகமுடன் பிறர்க்குபகாரனுமா
வளங்கொள் களத்திரமகிழவும் பந்துமித்ராள்மகிழவும்
வளர்பொருள் தானியலாப மறுசுவைபோசனமும்
துளங்குபுராணக் கேள்விசோதிட வேதாந்தம்
தூபிதலந்தாம்பூலம் சோபனமே சொல்வர்.

## 10-வது சமயம்

சொல்லுவன்பத்தாஞ் சமயநீறுதரித்திடுதல்
சொற்பவித்தைதெய்வபக்தி யற்பதனவருத்து
பல்லலங்காரன் வெளிக்குக்கீர்த்தி யுளன்பிறர்க்கு
பண்புபெறு சுயசாதி மித்ருதுரோகனுமாம்
நல்லவர்கள் சாபமதால் திரேகமதிற்பீடை
நவில்தெய்வ பிரார்த்தனை மந்த்ரமவிழ்தசித்தி
அல்லதுசெய்துபிறர் பொருளை களங்கமதாற்கவர்ந்து
மாவலாலுணவுசெய்வ னன்னடையிலே

## 11-வது சமயம்

சோதிடநூலாருரைப்பர் பதினொன்றும் சமயம்
சூட்சமா மந்திரசித்தி பூதபசாசுகளை
மோதியேசிஷ்டைசெக மோகனமே செய்தல்
முக்காலதேச வர்த்தமானமதையறிதல்
வாதமொடு வயித்தியஞ்செய்திடுவன் மிகுபூமி
வளமையுளான் தனதான்யமனைவி மைந்தருளனும்
ஓதுவர்களுயிர்களின்மே லிகையுள்ளவனும்
ஒவ்வா தசத்ருவுக் கிடியேறுப்பவனே.

## 12-வது சமயம்

உன்னிதயோகன் சகப்பிரசித்தன் உறுதொழில் சித்திநற் குணவான், பூகிநல்வித்தை சாஸ்திர தர்க்கன் ஊண்சுகன் யோக்கியவானே, மன்னனும் பிரபலன் தானமாசாரன் மானிஷ்டையேவலால்மிகவாம், மாய்கையைகற்றும் விபூதிருத்திராட்ச மாலிகாபரண நற்சுசிமான், நன்னிலையுடைய இஷ்டர்கள்நேசன் நற்சுபசோபனகாமி, நன்னெறிமகிழ்ச்சி விருத்தியுபாசி நவிலுவர் வாகன முடையோன், பொன்னிலமதனில் அதிகவிர்த்தியதாம் புகல்வியாபார மேன்மேலாம், புகலுவர்வயது தீர்க்கமாமின்னூர் புகழ்சொன்ன வஸ்திரசமயம்.

## 13-வது சமயம்

பத்தின்மேல்மூன்று ரசவர்க்கசமயம் பகருவாருமறை தெரிந்தோர், பாரில்பற்பலவாந் தான்யவியாபாரம் பலிதமாய்ப் பூப்பயிர்விருத்தி, புத்திமானுலகிற் பற்பலவான புகழ்பெறு தரும சிந்தையினுன், பூதலந்தனிலே போகபாக்யவான் புத்ரமித்ரர்கள் மனைவியினுல், இத்தரணியினற்புகழ் பெயருளனுமியல்பெறு சலசமாதெண்மர், ஏதமில்லாமலிருந்திடுங் குணவா னிருநிலத்தோர்களும் புகழும், வித்துவான் சகலபாஷைகளிடத்தும் விதியறிந்துரைக்கும் வல்லவனும், வீறுதுயர்யோகனு மெனவிளம்பும் வேலினை நிகர்த்திடுங்கண்ணுய்.

## 14-வது சமயம்

கண்மணிகேளீ ரேழாஞ்சமய மதைப்புகல்வேன்
கற்பாஷாணச் சமயமென்னவே சொல்வர்
மண்ணில்வெகு குணமுளனு மாபூமிதனவான்
மாதுவர்க்கம் பிதுர்வர்க்க மாகருமமுளனும்
அண்ணல்வெகு சூட்சிகுண மாட்சிவிரனுமாம்
ஆனபிரை யாசிதன வீனனெனவறைவார்
குண்ணுவழி நடைதனிலே மிகவிளைப்புள்ளவனும்
கொடுவிசை [illegible] வர்சோதிடரே.

### 15-வது சமயம்

வல்லிகேள் துர்க்காபரணமேதரித்தல் மன்னுமூவைந் தெனுஞ்சமயம், நல்லபுத்திரர் மித்திரர் களத்திரமும் நவிலன்னே தந்தையர் நாசம், சொல்லுவர் சிரேஷ்ட கனிஷ்டபங்காளி சினே கரு நாசமதாகும், அல்லலு மடைவன் சாதகனென்றே அறை குவர்மறையுணர்ந்தவரே.

### 16-வது சமயம்

மறையுரைத்திடு மீறெட்டெனுஞ் சமயமென்னு பீதாம்பர மணிதல், மாண்புளசிநேகர் தமரையுநித்தம் வணக்கமா யுபசரித் திடுதல், குறைவிலாப்பூமியுந் தனதான்யங் கோதிலாரத்தின பரணம், கொற்றவர்தமக்கு மித்திரனும் கொடியசத்துரு ஜெய முடையோன், தரணியில்வெகுபேர் தேடியபொருளுந் தான்யமு மெளிதில் வந்தெய்தும், தானதர்மங்கள் வஸ்திரலாபம் ததியுடன் சீஷர்போசனமும், கறையிலாவஸ்திர மணிதலுந்திவ்விய களப கஸ்தூரியில் விருப்பும், கானம்ார்கீத நடனநாட்டியத்தில் கன விருப்புடையவனென்பார்.

### 17-வது சமயம்

என்பர்பத்தேழாஞ் சமயமாயுதத்தோடேய்த்த சிம்மாசன மிருந்து, எண்டிசைத்தொழிலு நடத்துவன் பூமியொடுதன தானியமிகவாம், நன்மையோ டுகித்திடுதலும்போக நலனுறு வஸ்திர மணிதல், நாடியபுகழ்ச்சி வெற்றியோடன்ன நடையினர் தங்களைத்துதிக்கும், தன்மையானுலகைவசியமே செய்தல் தாஷ் டிகர் பூஜ்யதையுடையோன், சங்கரனயன்மால் சேவையுந் தீர்த்த யாத்திரை தன்னிலுஞ்சான்ரோர், பன்மறைகேள்வி யனுக்கிரகசித்தி பாரகாவிய முணர்திறமும், பற்பலநலமுண் டென்றுரைசெய்வர் பாவலராகிய பழையோர்.

### 18-வது சமயம்

பாவலருரைப்பார் பதினெட்டாஞ்சமயம் பாரினில் பிராணி யை வதைத்து, பலவழக்காடி ஜெயமடைந்திடுதல் பலரிடத்திற் கடன்படுதல், கேவவ தேகனவிழ்தமேபொசித்தல் தேள்தன தான்யம் தவக்கம், கீர்த்திமான்வெளிக்குக் குடும்பனுமோம கிரக சாந்திகளிலே பிரியன், நாவலர்முதலோர் தங்களைவிகடம் நவிலு வன் தாலகிர்த்தியனும், நாட்டுளார்சமய வாதிகளுடனே நவிலுவான் சகலதர்க்கமுமே, தீவினைதேக விரணனுமென்பர் திசைகளந்தத் தினிற்செப்பும், செய்தொழில் மேன்மைதன தானியபூ... [illegible]

## 19-வது சமயம்

பத்தொன்பான் சமயமிது காலில்விலங்கிடுதல்
பயமிலான் தைரியவான் துராக்கிருதன் துடுக்கன்
மெத்தவே சேட்டையுளன் ஞானமிலாவினன்
வேதனைசெய் வயிற்றுவலி சூலைகுடல்வாதம்
நத்துகளத்திர முதலாய் புத்திரகிலேசம்
ராஜசிறை திருடன்பிதுர் தூஷணமே நவில்வர்
சத்துமதி யாருலகோர் யாருமிவன் தன்னை
சண்டாளன் பொய்யனென தானறிவாய்மின்னே.

## 20 - வது சமயம்

மின்னனையாய் கேளிருப தாஞ்சமய மிருபிராணிகளை வெட்டு தலான், மீறியபவமிருத் தொடுபயம் நித்தியமிகுபிரை யாசையே படுவன், மன்னியவறுமை அடிமையாளனுமாம் வளர்த்திடு மன்னை தந்தைக்கு, மாதுயர்செய்வன் நித்தியகிலேசன் மனமறி பாவகிர்த்தியனும். நன்னிலையில்லா தூஷணகிருத்யம் நவின் றிடும்சுகமிலானடிமை, நவில்சிரரோகன் மேகவாய்வுடனே நாடியவிஷமுளரோகன் தன்னை, வந்தடுத்தோ ருக்குபகாரி தன மிலான் தயையிலானீனன், தந்தைதாய்தமர்கு தகமதுசெய்து தானுமேகடன் படுவானே.

## 21 - வது சமயம்

மானே இருபா னென்றதற்கு வழுத்தும் நமஸ்கா ரச்சமயம், வானோர்முத லந்தணர் தமையும் வணங்கித் துதிக்கும் பிறர் பொருள்மேல், தானே மிகவிச் சையுளனும் தனமே குறையு செல வதிகன், தேனூர் சுவைபோ சனசவுக்யன் செகத்தோரிகழு நடை யான்.

## 22 - வது சமயம்

நடக்கு மிருபா னிரண்டுபுரோட் சமையவின்னை பிதா, இடத்திற் பிரியன் களத்ரபுத்ர ரெழில்சேர் யோக போக்கியமாம், பிடித்த தொழிலும் சித்தியதாய் பெருகுஞ் சுபசோ பனமவன தன், கடத்திற் சுகந்த பரிமளமும் கலைவெண் மதிபோற் கலை யணிவான்.

## 23 - வது சமயம்

அணிசே ரிருபான் மூன்றினுக்கு மஸ்வ நடாத்து மதுசமயம் தணியா வமிர்த பொசிப்புதனம் சாஸ்திரம் வழுவா நடையுள னும், பணியார் கனகம் சுரபிவஸ்திரம். பாரில் மிகவும் பலித் திடுமே, பிணியிலாமல் மேன்மேலும் பெருகு மாயுள் தீர்க்கமதாம்,

## 24 - வது சமயம்

இருபா னுன்கில் மேற்றிசையி லெழில்சஞ்சார மெனவிசைப்பர்
மருவுஞ் சகட வானமும் வாழ்வன் கிராமா திக்கமுடன்
தருமே வஸ்திர லாபமது தக்க கிரகந் தனம்பூமி
பொருமே கொடுக்கல் வாங்கலுடன் புரை தீ தருமம் நடத்துவனே.

## 25 - வது சமயம்

மருவுமை யைந்தாம் சமயமேயெழுந்து மாசூட்சயோசனை புரிதல், வெகுவிலாக் கபடவஞ் சகநெஞ்சன் வெளிக் குடம்பன் வெகுதீரன், பரிகலம் பதினெட் டுடையவன் வெகுபேர் பயப் படும்படி யுறுக்கிடுவன், அருளிலான் கோவிய னுசாரனென்றே அறைகுவர் அருமறை யறிந்தோர்.

## 26 - வது சமயம்

அறிந்தவ ரிருபத் தாறெனுஞ்சமய மசுவவா கனமழைத் திடுதல், சிறந்ததோர் தடாக நந்தனவனமும் சிவாலய மன்ன தானங்கள், அறம்பல புரிந்து குருதெய்வமறையோ ரடுத்திடும் போதுரட்சகனுய், புரந்தர னென்ன கீர்த்திமான்சிநேக பூஷித னெனப் புகன்றிடுவார்.

## 27 - வது சமயம்

புகலிருபானேழ் சமயம்வாகனத்தி லிருத்தல்
பூவில்குடும்பத் தலைவன் பரவு பகாரனுமாம்
அகலிடமுந் தனதான்ய மகிழ்சிறந்தசுரபி
அன்ன வஸ்திரமுமா ளடிமையர்கள்மிகவாம்
மிகத்தரும தானமுடன் பாகவதபாரதமும்
மேலாம் ராமசரிதைமிக விருப்பமுடையோன்
ஜெகம்தில் வியாபாரமிகு பற்பலவாங்கீர்த்தி
சேர்ந்த பந்து சுதர்களுக்கு செங்கோல் மன்னவனும்.

## 28 - வது சமயம்

ஆறிருபத் தெட்டாகும் சமயமதைக்கேண்மோ
ஆகாத பிரேதகஞ் சாரமெனவறைவர்
நாமுரைப்போந் திசைபுத்தி மத்தியிலேதேக
நலியும்வெகு வாதனையால் தூஷணமே நவில்வார்
பூமிதனில் மிகவலைச்சல் காலமதிற்புசித்தல்
பொல்லாங்கு நிஷ்டூரம் பிறர்வெகு தூஷித்தல்
தீமைபுரிந் தேயுலகி லபகீர்த்திசுமந்தே
திரிவரெனவே மொழிவர் தெய்வமறையோரே.

29-வது சமயம்

மறைபுகலு மிருபானொன் பான்சமயமதுகேள்
மன்னுயிரைப் பிடித்கல் மாகுருவுந்தெய்வம்
புரையிலந்தணரை நிந்தித்தல் சோதரரைப்
பெற்றதாய் தந்தையரை சற்றுமதியாமை
இறையளவுஞ் சீவர்கள்மேல் காருண்யமிலனு
மெழிலுலகில் நிந்தைபுரிந் திடுவன்வெகுமர்மி
குறைசெய் பசாசுகளாலும் நவக்கிரகத்தாலும்
கொடுமைசெய்யும் பாவியெனக்கூறுவர் நூல்வல்லோர்.

30-வது சமயம்

முப்பான் திதி பூசையதாகும் மொழிவர் மணிமந்த் ரவிழ்த சித்தி, செப்பார்புத்திர களத்திரரொடும் சேர்ந்தோர் வணங்குஞ் சாந்தகுணன், இப்பார் தனிலே மிகவலிய னெழிலார் ஸ்திரீகள் வசியனென்பர், தப்பா தைரிய லட்சுமியும் தனமுந் தான்ய மிக வுளனும்.

31-வது சமயம்

சொன்னேன்முப் பத்தொன்றதற்கு துர்போசனனென்றுரைத் திடுவர், பொன்னே யிவனைப் பிறர்துதிக்கும் பூசித்தவர்போல் சிந்தைசொல்வான், அன்னை பிதுர்வர்க் கங்கள்தனை அலைச்சல் படுத்து மாபாவி, என்னு ளிலுமோ ரோகமிகும் ஈனத் தொழிலில் விருத்தியுளன்.

32-வது சமயம்

முப்பா னிரண்டிற் சலபான மொழிவ ரவிழ்த மிகபொசிப்பான்
அப்பா வியாதி பீடைமிகு மவன்தன் புத்ர களத்திரமும்
நப்பார் சுயசா திகள்பிறரும் நவில்வர் விரோத மிகுகடினம்
தப்பா ரிவர்க்குக் கடன்மிகவாம் தன்கா ரியமுந் தாழ்வாமே.

33-வது சமயம்

மாதுகேள்முப்பான்மூன் றுதாம்பூலம் வழங்கல்சத்குணன்சுகவானு
மன்னுசந்தனமும் நட்பகந்தங்கள் மகர்புழியணியலங்காரம் [ம்
ஏதமில்சுரபிமறி யொடுமகிட மெருதுமாளடிமைகள் மிகவாம்
எழில்பெறுகலையில் தானியமதனி லேறுலாபங்களுமிகவாம்
தீதிலாதன்னிய பாஷைகள்தனிலே தீரனும் கீதவாத்தியத்தில்
தெளிவுளன்தெய்வங் குருமறையவர்க்கு தொண்டுசெய்
[தருள்பலவெறுவன்
ஆதரவுடைய தந்தையின்தனமு மகன்றிடு சத்துருபொருளும்
அவன்வசமாகு மிகவுந்திய ...மெனவுரை குவரறிஞர்.

### 34-வது சமயம்

அறைவார் முப்பா னுன் கதற்கு அளிசந் தனம்பூ சுதலாகும்
மறைதேர்ந் திடுவன் பிரசங்கி மாலாந் தனதா னியமிகவாம்
புறைதீர் புதவன் குருபுத்தி புண்ய மிகுதி பிறவிச்செல்வம்
தரைமேல் கீர்த்தி மிகவுளனும் தனத்தி லளகைத் தலைவனுமாம்

### 35-வது சமயம்

மானே முப்பத் தைந்தில்நித்ரை மாகா மியனும் ஸ்திரீகலகன், தேனே தூர்த்தன் பிறர்பொருள்மேல் சிந்தைமிகவஞ் சகன் மனதில் கோனே யெனச்சில் லரைப்புகழ்ந்து கொடுமை சொல்வன் பின்பவர்மேல், ஆனபிரீதி பிதுர் அன்னை அடியாள் நாசம் பந்துகர்மம்.

### 36 வது சமயம்

கன்னல்மொழியாய் கேள்முப்பானு ருஞ்சமயம்
கருதிடுமோ கனகமவிழ்தமணி மந்த்ரசித்தி
இன்னமுறை மனைவிபுத்ரர் மித்ரர் நட்புளனும்
ஈதலிலாப்புத்தி விவேகமு முண்டென்பார்
மன்னுதன தானியங்கூட்டு வியாபாரமதனில்
வந்திடுந் துரோகமதாற் சிந்தையிலே சமர்த்தன்
நன்னிலையி லான்பாவி யரசர்நிஷ்டூரனுமாம்
நாடிபிறர் பொருளிச்சை யாகும்வியா கூலனே.

### 37-வது சமயம்

கூறுவாய் முப்பானேழ் பிறர்தமை தூஷித்தல்
கோபிதுஷ்ட புத்தியுளான் பாவமனுடிப்பான்
வீரமே கிலேசமது தனதானிய நஷ்டம்
மேலான சுரபிகன்று காலிநஷ்டமென்பர்
ஆறுசுதை யொடுதுணைவி யில்லாமலலைந்து
அரசர்பகை யாலவருஞ் சிறைபுகுந்து நொந்து
ஈறுமுத லும்நடிவி லாதபரன்ருளால்
எப்போதும் வறுமையுள னென்றுரைப்பர் நூலோர்.

### 38-வது சமயம்

முப்பானெட் டாஞ்சமயம் நித்திரையாங்காவி
மொழிவன்விரோதம் என்றுந் துன்மந்திரியாலே
அப்பால்செய் தொழில்தவக்கம் வித்தையுடன்மறைவு
ஆனகவிகாவியம் சங்கீதமுடன்பாட்டு

தப்பாநாட்டிய தொழிலால் சஞ்சலயாசகியாம்
தனருணவான் களவதனல் தண்டனைக்குட்படுவான்
இப்பாரில் சத்தியபுத்தி சுகந்தாழ்வாயலேதல்
இரவுபகல் கஷ்டமுளான் எருமைபோல்நடப்பான்.

## 39-வது சமயம்

முன்னவருரைப்பா முப்பத்தொன்பதற்கு
முனிவொடு கலகமே புரிதல்
அன்னை தந்தையர்க்கு விரோதிபொய்கேட்பன்
அவரைத் தூஷித்திடுந் துஷ்டன்
சொன்னதோர் பந்து சகோதரர்க்கிலேசன்
தொழிலுறு கொடுக்கல் வாங்கலிலும்
அன்னியவீடு தனமுதற் ருன்ய
வண்மையு மற்பமா மயிலே.

## 40-வது சமயம்

மயில்நிகர் மாதே நாற்பதாஞ்சமயம் மகிழுடி யியங்குத லென்பர், அயலுளோர் தூஷித் திடுதல்துர்ப்போகி அனுசார மிகவுளன் காமி, செயமிலா நண்பன் தந்தையர்நாசம் செப்புவர் பூதன மிலாத, கயவனுமீன விருத்தியன் மர்மி கைப்பொரு ளுக்குமே செலவாம்.

## 41-வது சமயம்

வானமடமானே நாற்பானொன் ருஞ்சமயம்
வழுத்துவர் திரேக்கானம் மருவுசத்துருபீடை
ஆனசுகந் தாழ்வுகளத் திரர்புதல்வர் நாசம்
அம்புவிகொஞ்ச முளனருள் தனமிலாதான்
மேனிதனில் ரோகமுளன் மூலரோகமதுவே
மிகுதியா மௌனமொழிவர் தானப்பிரஷ்டன்
மானதுதந்தை யன்னைபொருளுந் தன்பொருளாம்
வளரிடமு மிலனெனவே சாற்றுவர் நல்லோரே.

## 42-வது சமயம்

நல்லவருரைப்பர் நாற்பதுமிரண்டும் நாட்டில்சஞ் சாரமா மென்பர், நலமிலான்காமக் குரோதலோபியனும் நாடுநீச்சர்கள் சகவாசன், அல்லலேமிகுந்த நீசகிர்த்தியனு மன்னை தந்தைய ரோடு களத்ரம், யாரையும்நம்பா மனதுடையவனும் அன்னியர் சொத்தபகரிப்போன், சொல்லுவர்மேக ரோகமோ டசீர்ணந் தோன்றிடு மூலரோகமுமே, தொந்தமா மலப்போர் தெந்தநாளை யினுஞ் சோர்விலாப் பாவமேபுரிவன், தொல்லுலகதனில் தந்தை யின்குலத்தில் சூழ்ந்தபந்து குலத்தோர்க்கும், துரோகனுமிருக் 'பயமுளோனரசர் சீரியேயுலகு தூஷிக்கும்.

## 43-வது சமயம்

மறைபுகல்நாற்பான் மூன்றில்சந்தோஷம் வஸ்திரத் தொடு தனதான்யம், மன்னுதேவதைகள் தன்னையேதுதித்தல் மாகங் கை தீர்த்தமேயாடல், பிறையணி சடையோன் ஆலயமுடனே பெரியமாலாலயமதனைப், பேதமிலாம லனுதினந்தொழுது பெற் றிடுமருட் பிரசாதம், நறைவிரிகமல மாதுதன்னருளால் நன் னடை செய்தொழில் விர்த்தி, நான்மறைப்புராண சாஸ்திரக் கேள்வி நற்கருமத்தொடு தானம், புறையறுசிநேக ராயுதவிர்த்தி பூமியுமேவலாள் சுரபிபொங்கிய செல்வந், தங்குமென்றுரைத்தார் போதமார் முனிவர்கள் தாமே.

## 44-வது சமயம்

நாற்பா னுன்கிற் சலசையவன் நணுகுஞ் சமயம் பிறனூர் போய, சேர்ப்பான் மிகுந்த தனமதனை செய்யுந் தொழிலில் லாபமதாம், காப்பான் களத்ர புத்திரரை கருதும்போக வாக்கிய வான், பார்ப்பார் முதலோர்க் குபகாரி பண்பாற் றைரிய லட்சுமி கரன்.

## 45-வது சமயம்

கருதும் நாற்பான் ஐந்ததற்கு கங்கா ஸ்நானம் சிவனருளால் பெருகுந்தேவர் பிரசன்னம் பேரூர் தலங்கள் யாத்திரையாம் மருவுஞ் சாந்த குணன்தருமன் வளர்நாற் றிசையுங் கீர்த்தி யுளன், உருகுமணி மந்த்ரவிழ்த சித்தி ஒளிர் தேவர்கள் பிரசாத முளான்.

## 46-வது சமயம்

உள்ளதுநாற்பத் தாறுவிமான சமயமதாம்
ஒளிருமஷ்ட லட்சுமியும் வாசமவனிடத்தில்
எள்ளளவுங் குறையாமல் தயிர்பால்நெய்யுடனே
இன்பசுக போசனமென் னுளுமவன்புசிப்பன்
வள்ளலென வாகனமும் நித்தியகளத்திரமும்
மாண்புள புத்திரர் மகிழ்வுமா நிதி தானியமும்
கொள்ளுமுத்தியோக நட்புசுரபிமிகவுள்ளனும்
குடும்ப சவரட்சகனுய் கூறுவர்கள் பெரியோர்.

## 47-வது சமயம்

நாலுபத்தேழுக் களகைமானகரில் நற்குடியிருக்கை யுரி மென்று, நவிலுவர்புண்ய தவமதில்வாசம் நற்றனதானியம் பூமி, சாலவும்நஷ்ட னற்பவிருத்தியனும் தையல்மேற் காமியமதனுல், தனதுதேகத்தில் துன்பமேவினைத்து தவித்திடுவான் மலப்போக்

கால், கோலுமே யன்னத்துவேஷம் வந்தணுகும் கொடுத்திடு மவிழ்தத்தின்பலத்தால், கொடும்பிணியான இடும்பைகள்நீங்கி கூறனுகூலமேசொல்வர், மேலுநற்பூமி பயிரொடுதனமும் விருத்தியதாகிடுமென்றே, வேதியர்தானும் விளம்பினாதனை விபரமா யறிந்துரை செய்வீர்.

## 48-வது சமயம்

உரைசெய்வா நாற்பானெட்டதாஞ் சமையமுறும்புண்யகதா ப்ரசங்கம், உற்றநெய்தயிர்பால் கனிரசவர்க்க மூணதில்மிகவிருப் புளனும், நிறையோடுமேதி கன்றுகாலிகளை நெருங்கு சுற்றத்தை ரட்சித்தல், நேமிபொன்னடிமை யாள்களுமிகவால் நிறைந்திடு தானியமலைபோல், மறைமுடிவறியும் குருபதந்தனிலும் வானவர் பதந்தொழு மனதோன், மாவியாபாரி தொழில்மிகவிருத்தி மா கங்கையாத்திரைபிரியன், கறையிலாமனிதர் இஷ்டர்கள்நேயன் களித்திடும் போகபாக்கியவான், காதலால்தர்க்க சாஸ்திரமதனில் கனதருமங்கள் செய்புகழான்.

ஜெயமுனி சோதிட சூத்திரம்

முற்றிற்று.



# கருட தரிசன பலன்

தினகரனுல் கலியாண பலமேயுண்டாம்
திங்கள்தனில் நினைத்ததெல்லாந் திரளாய்க்கூடும்
அனமுடனே அறுசுவையுஞ் சிக்கும் செவ்வாய்
அபமிருத்து தோஷத்தை யகற்றும்புந்தி
மனதிலுறு துயரம்போம் குருவாரத்தில்
வளர்வெள்ளி தனக்கிடுக்கண் மாற்றிவைக்கும்
கனசனிநாள் கெம்பீர பலனேயுண்டாம்
கருடனைக் கண்டாலிதுவே கழறுவாயே.

## நந்திதேவரை தரிசித்த பலன்

அருக்கன் தனலாபம் மதிக்கே ஆடைவரு மங்காரகற்கு
மருக்கொள் பண்டம் புந்திகளி மன்னர்க் கின்பம் மாவலியன்
குருவுக் கிடர்போ குஞ்சனிக்கு குழந்தை பிறக்கு மீசன் நந்தி
இருக்கு மிடஞ்சென் றிறைஞ்சுவர்க்கு எய்தும் பலன்களிதுவாமே.

## * வாய்ச்சொல்

திங்கள்சிவமறையோன் செவ்வாய்புலவரிடம்
பொங்குபுதன்கம்மாளன் பொன்வளைஞன்—நங்காய்கேள்
ஆயன்சனிக்கிழமை அம்பட்டன்ஞாயிறு
தூயவெள்ளிவண்ணான் வாய்ச்சொல்.

* இவ் வாரங்களின் உதயத்தில் அந்தந்த சாதியார் வீட் டெதிரில் போக முதல் அங்கிருந்து வரும் வாய்ச்சொல்லே, தான் நினைத்த காரியத்தின் முடிவாம்.

பெரிய ஜோதிட சில்லரைக் கோவை

முற்றிற்று.

---

திருமகள் அச்சகம், சென்னை—1. 1975.

# விற்பனைக்குத் தயாராயிருக்கும் நூல்கள்

சுக்ர்நாடி என்னும்
**ஜோதிட சிகாமணி**

விலை ரூ. 15—00

திரிசிரபுரம், பீமாநகரம், சோதிட சித்தாந்தி ஸ்ரீ. கா. இராமசாமிப் பிள்ளை இயற்றிய அரிய பெரிய ஜோதிட நூல். 1500—இராசிச் சக்கரங்கள் அடங்கியது. 840—பக்கங்கள் கொண்டது.

இந்நூலில் ஒவ்வொரு ஜாதகனுக்கும் இராசிச் சக்கரங்களும் அதற்குப் பாடல்களும் உரையுடன் எழுதப்பெற்றிருக்கின்றன. சுமார் 1500—சக்கரங்களும் அதற்குப் பலனும் கூறப்பட்டிருக்கிறது. ஜோதிட சம்பந்தமான விஷயங்களனைத்தும் இந்த ஒரு நூலிலேயே அடங்கியிருக்கின்றன. பிறர் உதவியின்றி தங்களுக்குத் தாங்களே சுலபமாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டு காலிகோ கட்டிடம் செய்துள்ளது.

**ஜோதிட பிரஞ்ஞான தீபிகை** — **அச்சில்**

இந்நூலானது லக்கினமுதல் 12—பாவங்களுக்குமுள்ள பலன்களைச் சோதிஷம் அறிந்தவர்க்கும் அறியாதவர்க்கும் எளிதில் விளக்கிக் காட்டக்கூடிய ஒரு வசன நூலாக இருக்கிறது. இந்நூல் ஒவ்வொரு மனிதரிடத்திலு மிருந்தால் அவரவர் வாழ்வு நாட்களில் வரும் நன்மை தீமைகளைச் சுலபமாய்ச் சோதிடர்கள் உதவியில்லாமலே அறிந்துக் கொள்ளலாம்.

**சோதிட அரிச்சுவடி (4-பாகங்கள்)** — விலை ரூ. 4—00

ஒருவருதவியில்லாமல் சோதிடத்தை நீங்களே சுலபமாகக் கற்றுக்கொள்ளலாம். ஜாதகங்கள் ஸ்புடமும் செய்யலாம். சோதிட சாஸ்திரத்திலுள்ள எல்லாவிதக் கலை நுட்பங்களையும் தெரிந்து கொள்ளலாம். எல்லோரும் தெரிந்துகொள்ளும்படிச் சுலபமான நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

**அநுபோக ஜாதக ரகசியம்** — விலை ரூ. 3—00

கிரகசார சக்கரத்துடன் கூடிய இந்த ஜாதக ரகசியத்தை சோதிடர்களும் சாதாரணமானவர்களும் சுலபமாகத் தெரிந்து கொள்ளுவதற்காக, ஜாதகம் கணிக்கவும், ராசி கணிக்கவும், அஷ்டவர்க்கம் கணிக்கவும், கோசாரம், பன்னிரு பலாபலன்களும், திசாபுத்தி அந்தர பலன்களும் கண்ணாடிபோல் விளக்கி எழுதியிருக்கிறது.

ஜாதக விளக்கமென்னும்

**சுந்தர சேகரம்** விலை ரூ. 3—00

இதில் ஜனனகால ஜாதகக் குறிப்பு எழுத ராசி லக்கினம் நவாம்ச லக்கினம், இராசி சக்கரங்களில் கிரகங்களை அமைக்கவும், ஆட்சி உச்சம் நட்பு பகை நீசம் மூலத்திரிகோணம் சரம் ஸ்திரம் உபயராசிகளைத் தெரிந்துகொள்ளவும், ராசிகளிலிருந்து கிரகங்கள் பார்க்கும் இடங்களும், அவரவர்களுக்கு ஏற்பட்ட பாவ சுப ஸ்தானங்களையும் தெரிந்துகொண்டு, யோகபலன் ஆயுள் பலன் முதலிய பலன்களையும், மற்றும் துவாதசபலன் புத்திரபாவ பலன் மேற்படி தோஷநிவர்த்தி, காலச்சக்கரதசை புத்திபாச்சல் அஷ்டவர்க்கம் மாரகதசை முதலிய அருமையான அநேக விஷயங்கள் அடங்கியுள்ளன.

மேற்படி சுந்தர சேகரத்திற்கு இரண்டாம் பாகமாகிய

**தியாகராஜ சேகரம்** விலை ரூ. 2—50

மேற்படி சுந்தர சேகரத்திற்கு மூன்றும் பாகமாகிய

**சோதிட ஆனந்தக் களிப்பு** விலை ரூ. 2—50

சுகர் பெருநாடி என்னும்

**திசா புத்தி அந்தர பலன்** விலை ரூ. 2—50

ஒவ்வொரு கிரகங்களின் தன்மைகளோடு அவரவர்களின் திசா புத்தி, அந்தரங்களில் எந்தெந்த நிலைமையில் எந்தெந்தப் பலனைத் தருவார்களென்பதை மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

**அஷ்டதிக்கு ஆருடம்** விலை ரூ. 2—00

இதில் அஷ்டதிக்கு ஆருடம், பஞ்சபட்சி ஆருடம், ஆஞ்சநேயர் ஆருடம், ஜெயமுனிவர் ஆருடம், வால்மீகர் ஆருடம் முதலிய ஐந்து ஆருடங்களும் இந்நூலில் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டுள்ளது. பஞ்சபட்சி சக்கரமும் அடங்கியிருக்கின்றது.

ஆருடம் அறிய விரும்புவோர்க்கும், சோதிடர்களுக்கும் இன்றியமையாத நூல். ஞாயிறு முதல் ஈருகவுள்ள தினங்களில் ஜாமத்தோடு திக்கின் பலன்கள் நன்கு விரிவாக உரைக்கப்பட்டிருக்கின்றன.

---

கிடைக்குமிடம் :—

**B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்,**

**57, வெங்கட்ராமய்யர் தெரு, மிண்ட் போஸ்ட், சென்னை-1,**

சக்திதாசன் இயற்றிய

**சம்பூரண ரேகை சாஸ்திரம்** விலை ரூ. 7—00

சுமார் 300 படங்களுக்குமேல் அடங்கியிருக்கின்றன.



இதில் முக்கியமாக உலக சிரேஷ்டர்களாகிய மகாத்மாகாந்தி, ரவீந்திர நாத் தாகூர், முதலியவர்களினுடையவும்; உலகப் பிரமுகர்களாகிய சில ரர்ஜாக்களினுடையவும், வான்ஹிண்டன்பர்க், கிரேட்டா கார்போ, லாடு ரீடிங், ரூஸ்வெல்ட், முஸோலினி, ராம்ஸே மெக்டொனுல்டு, அமீலியா, அட்மிரல்பர்டு, புரொபசர் ஈன்ஸ்டீன், பெர்னுட்ஷா, சார்லிசாப்லின், ராக்பெல்லர், கெமால் பாசூஷா, ஹென்றி போர்டு, வின்ஸ்டன் சர்ச்சில் முதலியவர்களினுடைய கைரேகைப் படங்களே இதில் உதாரணமாகச் சேர்க்கப்பட்டு விளக்க மெழுதப்பட்டிருக்கிறது.

இதுபோன்ற அருமையான ரேகை சாஸ்திரம் இதுவரையில் வெளிவந்தது கிடையாது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கைரேகைப் பலன்களே சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். பிறருடைய கையையும் பார்த்துப் பலன் சொல்லலாம்; சீரிய கருத்துகளே எளிய நடையில் எழுதப்பெற்றது. இது ஒவ்வொருவரின் விதிப் பயனே விளக்கக் கூடிய கருவி நூலாக விளங்குகிறது.

சுகர்நாடி என்னும்

**ஜோதிட சிகாமணி** விலை ரூ. 15—00

திரிசிரபுரம், பீமாநகரம், சோதிட சித்தாந்தி ஸ்ரீ கா. இராமசாமிப் பிள்ளை இயற்றிய அரிய பெரிய ஜோதிட நூல். 1500-இராசிச் சக்கரங்கள் அடங்கியது. 840-பக்கங்கள் கொண்டது.

இந்நூலில் ஒவ்வொரு ஜாதகனுக்கும் இராசிச் சக்கரங்களும் அதற்குப் பாடல்களும், உரையுடன் எழுதப் பெற்றிருக்கின்றன. சுமார் 1500-சக்கரங்களும் அதற்கு பலனும் கூறப்பட்டிருக்கிறது. ஜோதிட சம்பந்தமான விஷயங்களனைத்தும் இந்த ஒரு நூலிலேயே அடங்கியிருக்கின்றன. பிறர் உதவியின்றி தங்களுக்குத் தாங்களே சுலபமாக தெரிந்து கொள்ளும்பொருட்டு விளக்கமாக கூறப்பட்டிருக்கிறது. உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டு கலிகோ கட்டடம் செய்தன்னது.

கிடைக்குமிடம்:— B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்,

57, வெங்கட்ராமய்யர் தெரு, மின்ட் போஸ்ட். சென்னை-1.